# கலித்தொகை பரிபாடல் காட்சிகள்

நா. பார்த்தசாரதி





## தமிழ்ப் புத்தகாலயம்

# G3 / 8, மாசிலாமணி தெரு
பாண்டி பஜார் மார்க்கெட் பின்புறம்
தி.நகர், சென்னை–600 017
த.பை.எண் 5193 ✆ 434 5904

மின் அஞ்சல்: tamilputhakalayam@yahoo.com
tamilputhakalayam@vsnl.com
வெப் தளம் : http://expage.com/tamilputhakalayam
http://akilan.50mpegs.com

கலித்தொகை பரிபாடல் காட்சிகள்
முதற் பதிப்பு : நவம்பர், 2000

விலை : ரூ. 25.00

**KALITHOGAI PARIBADAL KATCHIGAL**
by **NAA. PARTHASARATHY**

First Edition : November, 2000
Pages : 120
Cover design : **K. UMA**



**TAMIL PUTHAKALAYAM**
G-3 #8, Masilamani Street
Pondy Bazaar, T. Nagar
Chennai - 600 017
✆ 4345904

E-Mail : tamilputhakalayam@vsnl.com
tamilputhakalayam@yahoo.com

Website : http://expage.com/tamilputhakalayam
http://akilan.50mpegs.com

Price : **Rs. 25.00**

Printed at : Udayam Offsets, Chennai - 2.
✆ : 8534808; 8520906

# பொருளடக்கம்

# கலித்தொகை பரிபாடல் காட்சிகள்

## இலக்கியம்

*கலித்தொகை என்னும் நூலிற் காணப்படும் நயமான சில பகுதிகளை சுருங்கிய அளவில் காட்சி போல விளக்குவதே இந்நூலின் நோக்கம்.*

*சங்க இலக்கியங்கள் இரண்டு பொருள்களைக் கருவாகக்கொண்டு இயங்குவன. ஒன்று காதல்; மற்றொன்று வீரம். காதலைப்பற்றிய பாடல்களை அகமென்றும், அறம்பொருள் முதலியவைகளோடு கூடிய வீரத்தைப் பற்றிய பாடல்களைப் புறமென்றும் பகுத்துள்ளனர். இவற்றுள் கலித் தொகை அகத்தைச் சார்ந்தது. காதலைப் பற்றிய செய்திகளை இலக்கியச் சுவைபட வகுத்துக் கூறுவது.*

*முதற் பகுதியாகிய பாலைக்கலி காதலன் காதலியைப் பிரியுங்கால் நிகழும் செய்திகளைக் கூறுவது. இரண்டாவது பகுதியாக குறிஞ்சிக்கலி காதல் தோன்றுவதையும், ஒன்றுபடுவதையும் கூறுவது. மருதக்கலி காதலி காதலனோடு ஊடும் செய்திகளைக் கூறுவது. நான்காவதாகிய முல்லைக் கலி காதலியும் காதலனும் இல்லின் கண்ணிருந்து காதல் வாழ்வு நடத்தும் செய்திகளைக் கூறுவது.*

*ஐந்தாவதாக நெய்தற்கலி தலைவன் பிரிவில் தலைவி இரங்கும் செய்திகளைக் கூறுவது. இவ்வைந்து திணைகளையும் கருப்பொருளாகக் கொண்டே பழந்தமிழர் அகவாழ்வு நிகழ்ந்திருக்கிறது. எந்த முறையில் கலித் தொகைக்காட்சிகளை காண வேண்டுமெனின், முதலிற் செய்யுளின் திரண்ட கருத்தை விமர்சித்துப் பின் செய்யுளைக் காண வேண்டும் அப்போதுதான் நன்றாக உணர்ந்து அனுபவிக்க முடியும்.*

*முதலாவதாகிய பாலைக்கலி காதலன் பிரியுங்காற் காதலி பிரிவாற்றாது கூறுவனவற்றைப் பேசுவதென்று முன்பே*

கூறினோம். "அன்பு ஒரு ஆச்சரியமான பொருள்; அது கொண்டாரைப் பிரியாது பேணவைக்கும் இயல்பு வாய்ந்தது" என்றான் வேட்ஸ் வொர்த்து. "பிரியுங்கால் உயிர்விடுவேன், ஆதலினாலே நீ பிரியாதே" என்று கலித்தொகைக் காதலி தன் தலைவனிடம் கூறக் காண்கிறோம்.

அக நானூற்றில் ஒரு புலவனும் இதைக் கூறுகிறான்.

ஆசிரியர் திருவள்ளுவரும்

வாழ்தல் உயிர்க்குகன்னள் ஆயிழை காதல்
அதற்கு கன்னள் நீங்கு மிடத்து

என்று இதை கூறுகிறார்.

## பாலைக்கலி

பாலை என்பது அகத்திணையில் பிரிதலொழுக் கற்குரிய திணை, தலைவனைப் பிரிந்த தலைவியிடம் நிகழும் நிகழ்ச்சிகளையும் கூற்றுக்களையும் அழகிய முறையிற் கூறுவது இத்திணை. பிரிதலும் பிரிதல் நிமித்தமும் பாலைக்குரியன. தலைவன் தான் பிரிவதை தோழிக்குக் குறிப்பால் உணர்த்துவான். கூற்றால் உணர்தலும் உண்டு. அதைக் கேட்ட தோழி தலைவனது பிரிவைத் தடை செய்து உரைப்பாள். இதற்குத் "தோழி செலவழுங்குவித்தல்" என்று பெயர். தலைவன் பிரியின் தலைவி உயிர் வாழ்வது அருமை என்பாள். இனி இங்ஙனம் தோழி செலவழுங்குவித்தற்குரிய கலித்தொகைக் காட்சியைப் பார்ப்போம்.

## பிரிவும் பரிவும்

"ஒரு காலும் மறத்தற்கரிய காதலையுடைவளாகிய இவள் இவ்விடத்தே இருக்க, பிரிவுமேற்கொண்டு பிரியத் துணிந்த தலைவரே கேளும். தம் பொருளெல்லாம் தீர்ந்து போக வறுமையெய்தி வந்து கை நீட்டி இரந்தவர்களுக்கு அவர்கள் விரும்பும் யாதானுமொரு பொருளைக் கொடாமை இழிவாகும் என்றெண்ணி வழியிலே உள்ள மலையைக் கடந்து பிற நாட்டிலே சென்று பலவகைச் செயல்களை இயற்றிய அதனால் ஈட்டிய

பொருளை இரந்தவர்களுக்குக் கொடுக்கலாமென்று எண்ணி என்றும் அழியாது நின்று நிலைத்த கற்பினையுடைய இவளுக்கு நின் பிரிவு வாழ்வாமோ? நீ பிரியின் இவள் உயிர் வாழமாட்டாள்" என்கிறாள்தோழி. இதற்குள்ள பாட்டு வருமாறு :

"மறப்பருங் காதலிவளீண்டொழிய
இறப்பத் துணிந்தனிர்கேண்மின்...,
தொலைவாகி இரந்தோர்க்
கொன்றீயாமை இளிவென
மலையிறந்து செயல் சூழ்ந்த
பொருள் பொருளாகுமோ
நிலைஇயகற்பினாள் நீநீப்பின் வாழாதாள்"

(இறப்ப - பிரிய, தொலைவாகி-இழந்து-மலையிறந்து மலையைக் கடந்து)

(பாலைக்கலி)

தலைவி பக்கத்தே இருக்கின்றாளாதலால் தோழி தலைவியை இவளென்றும், தலைவன் முன் நிற்கின்றான். ஆதலால் அவனை நீ என்றும் சுட்டுகிறாள். இந்தக் காட்சியில் தலைவிக்காகத் தோழி தலைவனிடம் தடை செய்வதையும் அத்தடைக்கு அவள் கூறும் மறுக்க முடியாத காரணங்களும் நன்றாகத் தெரிகின்றன.

## கான வழியிற் காதல் நினைவு

பிரிவுணர்த்திய தலைவனைத் தோழி, வேறு காரணங் கூறி அதனாற் பிரிவைத் தடுக்கிறாள். "நீ பொருள் தேடுவதற்காக வேற்றூர் செல்வதற்காகக் காட்டைக் கடந்து செல்ல வேண்டியிருக்கும். நீ கடந்து செல்லும் காட்டிலே காணும் ஒவ்வொரு காட்சியும் உனக்குத் தலைவியை நினைவூட்டும். அந்நினைவு பொறுக்க முடியாமல் நீயே மீண்டுவிட நேரும்" என்று தோழி தலைவனிடம் கூறுவாள். இதைப்பற்றிய அழகிய காட்சியொன்று கலித்தொகை சித்திரங்களில் உண்டு. கான வழியிற் காதல் நினைவு எழுதற்குரிய காரணங்களான காட்சிகளைத் தோழி மிக அழகாக எடுத்துக் கூறுகின்றாள். தனி நயமும் அதிலமைந்துள்ளது.

"நீ பிரிந்தால், உன்னையே தனக்கு உயிரெனக் கொண்ட இவள்(தலைவி) உயிர் நீப்பாள்" என்று யாங்கள் பலவற்றை எடுத்துச் சொல்லி வேண்டிக் கொள்ளவும், அங்ஙனம் வேண்டிக்கொண்ட எம்முடைய வார்த்தைகளை நீ கொள்ளாதவன் ஆயினாய்.

ஆயினும் நீ செல்லும் வழியில் நீர் இல்லாது வற்றிய சுனையில் இலைகளோடு கூடி வாடிய அழகிய மலர்கள் நினக்கு நின்னைப் பிரிந்து வாடும் தலைவியை நினைவூட்டும். தமக்குக் கொழு கொம்பெனத் தாம் கொண்டு தழுவிப்படர்ந்த மரம் வாட, அதிற் படர்ந்திருந்த பூங்கொடிகள் கீழே வீழ்ந்து கிடப்பன, அவை நின்னைக் கொழு கொம்பாகக் கொண்டிருந்த தலைவி நீ பிரியச் சோர்ந்து துணையின்றி வாடுதலை நினைவூட்டித் தடை செய்யும். அம்மரத்தின் அழகு கெட அதனால் வாடிய தளிர்களை காண்பாயாயின் அவை நினக்கு நின் பிரிவால் தன்னுடைய தளிர் மேனி வாடும் தலைவியை நினைவூட்டி தடைசெய்யும். கான வழியில் உனக்குத் தெரிகின்ற இக்காட்சிகள் தலைவியின் காதல் நினைவை உண்டாக்கத் தவறாதன. என்வே பிரிவை ஒழிக்க முயலுக."

"உடையிவள் உயிர் வாழாள்
நீ நீப்பின் எனப்பல
விடைகொண்டு யாமிரப்பவும்
எமகொள்ளாய் கடை இய ஆற்
றிடை நீர்நீத்த வருஞ்சுனை
அடையொடு வாடியஅணி
மலர் தகைப்பன
செல்லும் நீளாற்றிடைச்
சேர்ந்தெழுந்தமரம் வாடப்
புல்லு விட்டு இறைஞ்சிய
பூங்கொடிய தகைப்பன
றிடையம் துணிபுநீ செலக்கண்ட
ஆற்மரத்து
அணிசெல வாடிய அந்தளிர்
தகைப்பன

–பாலைக்கலி–2

*(கடைஇய-செல்லுகின்ற, தகைப்பன-தடுப்பன, வறுஞ்சுனை, நீரில்லாச் சுனை புல்லு-தழுவுதல் இறைஞ்சிய-தாழ்ந்த, அணி-அழகு, துணிபு-துணிந்து)*

*இக்காட்சியில் தோழி தலைவனைப் பிரிவு நீக்குதற்குக் கூறும். கானக்காட்சிகள்,தலைவியின் நலங்கெடும் என்பதைக் குறிப்பாக உணர்த்தும் நயம் பெறத்தக்க இலக்கிய அமைப்புப் பெறுகிறது.*

## கொடுங்கோல் ஆட்சியில் நடுங்கும் குடிகள்

*தோழி தலைவனுக்குப் பலவாறு கூறியும் தலைவன் பிரிவை நிறுத்துவதாகக் தெரியவில்லை. கடைசியாக ஒரு வழியைக் கையாண்டு பார்க்கிறாள். அந்த வழிதான் "நீ நீத்துப் பிரிந்தால் தலைவியின் நிலை என்னவாகும் என்பதற்கு அவள் கூறும் உவமைகள் "நீ பிரிந்தால் இவள் கொடுங்கோல் வேந்தனுடைய ஆட்சியில் நடுங்கும் குடிகளைப் போலத் துன்புறுவாள்." என்பது போன்ற பல மறுக்க முடியாத காரணங்களை உவமை மூலமாகக் கூறுகிறாள் தோழி. தோழியின் சொல்வன்மை அவற்றில் வெள்ளிடையாக விளங்குகிறது. தோழி கூறுகிறாள்:*

*"நீ பிரிவாயாயின், இவள் ஆள்பவர் துன்புறுத்த அல்லலுழக்கும் நாடு போற் பாழ்பட்ட முகத்தோடு அளவற்ற வருத்தமெய்தி இருப்பாளோ? பலவகை ஒலிகள் தம்முள் கூடி ஒலிக்க, அதனால் கவின்பெற்று விளங்கும் திருநாள் முடிந்த பின்னர் அத்திருநாள் நிகழ்ந்த வறுங்களம் எத்தனைச் சூனிய அமைதி பெற்று விளங்குமோ, அப்படித் தனிமைகொண்டு இருப்பாளோ? ஓர்இராப் பொழுதில் நீர்ப் பொய்கையிலிருந்து நீக்கப்பட்ட தாமரை மலரொன்று அவ்விரவு முழுவதும் வாடாது மறுநாள் முதல் வாடத் தொடங்கும்.*

*ஆனால் இவள் ஓர் இராப்பொழுதும் நின் பிரிவைப் பொறுத்து அமைய முடியாதவள். "ஆதலால் நீ நின் பிரிவைபொழிக" என்பது இதனுள் தோழி தலைவியின் பிரிவுத் துன்பத்திற்குக் கொடுங்கோல் ஆட்சியில் நடுங்கும் குடிகளை உவமை கூறுவது கேட்போர்க்குக் கருத்தை மறுக்க முடியாத அமைப்பைப் பெறுகிறது. இதைக்காட்டும் கலித்தொகை ஓவியக்காட்சி கீழே வருமாறு :*

"ஆள்பவர் கலக்குற அலை
பெற்ற நாடுபோற்
பாழ்பட்ட முகத்தோடு
பைதல் கொண்டமைவாளோ
கல்லெனக் கவின் பெற்றறு விழ
வாற்றுப் படுத்த பின்
புல்லென்ற களம் போலப்
புலம்பு கொண்டமைவாளோ
ஓரிரா வைகலுள் தாமரைப்
பொய்கையுள்
நீர்நீத்த மலர்போல நீ நீப்பின்
வாழாதாள்"

(அலை-துன்பம், பைதல்-பிரிவதற்துன்பம், அமைதல் - இருத்தல், கல்லெண-கல்லென்று நிறைந்த ஒலி கவின் - அழகு, விழாவாற்றுப் படுதல்-விழாவை முடித்தல், புல்லென்ற-தனிமையெய்திய, புலம்பு - தனிமை, இராவைகல்-இராப் போழ்து)

இக்காட்சியுள் தலைவியின் நிலைக்குத் தோழிகூறும் "கொடுங்கோல் வேந்தனின் குடிகள்" என்பது. இங்கு அமைந்தமைக்கு காரணம். இதைப் பாடிய சேர அரசன் கடுங்கோல் ஒரு செங்கோல் வேந்தனாதலின் எனபது. செங்கோன்மையிற் பழகினாரே அதன் மறுதலையான ஒன்றின் இழிவை நன்றாக உணர்ந்தது பாட முடியும்.

## துன்பந் தொலைக்கும் இன்பத் துணை

இனி தலைவி தானே தலைவனுடன் வரப்போவதாகப் புறப்பட்டு விடுகிறாள். அரிய காட்டு வழியில் நீர் அனுபவிக்கும் துன்பத்திற்குத் துணையாக வருவதன்றி எனக்கு வேறுஇன்பமும் உண்டோ? எனத் தலைவி அவனை வினவுகிறாள். தலைவனை நோக்கித் தலைவி கூறும் சொற்களில் பெண்மையின் ஆர்வத்தைக் காண முடிகிறது. பெண்மையின் அஞ்சாமையைக் காணமுடிகிறது. காதல் உலகத்தின் தியாக எண்ணத்தையும் திண்மையையும் காண முடிகிறது தலைவி கூறுகிறாள்:

உண்ணுவதற்கு நீரின்றி வறப்பப் புலர்ந்து வாடிய நாவிற்குத் தண்ணீர் பெற முடியாது தடுமாற்ற மெய்திப் போக்குதற்கு அரிய துயரத்தை யெய்திக் கண்ணீர் சிந்தி அந் நாவினை நனைக்க வேண்டிய நிலையிற் கடுமைகளையுடையது. காடென்று நீர் நான் உம்முடன் வருதலை மறுத்துக் கூறினால் எனது உயிர் தாங்கியிருத்தலை யாற்றாது இறந்து படுதலை அறியாதவர் போல, மறுப்பான இம்மொழிகளை கூறுதலாற் பெற்றது யாது? நெடுந்தகையோனே! இவ்வார்த்தைகள் நின்னுடைய தூய நீர்மைக்குப் பொருந்துவனவல்ல. நீ எம்மிடத்து அன்பற்றுப் பிரிதல் கூடாது. கடுமையான காட்டு வழியில் உமது துன்பங்களைத் துணையாக நாடித் தொலைக்கும் அச் செயலல்லது எனக்குப்பிறிதோர்இன்பமுண்டோ? துன்பந் தொலைக்கும் இன்பத் துணையாக எம்மையும் உடன் அழைத்துச் செல்வாயாக.

**“உண்ணீர் வறப்பப்**
**புலர்வாடு நாவிற்குத்**
**தூண்ணீர் பெறா அத்**
**தடுமாற்றருந்துயரங்**
**கண்ணீர் ந்னைக்குங்**
**கடுமைய காடென்றால்**
**என்னீர் அறியாதீர்**
**போல இவை கூறின்**
**நின்னீர வல்ல**
**நெடுந்த காய் எம்மையும்**
**அன்பறச் சூழாதே**
**யாற்றிடை நும்மொடு**
**துன்பந் துணையாக**
**நாடின் அது வல்லது**
**இன்பம் உண்டோ எமக்கு”**

(உண்ணீர் - உண்ணும்நீர் வறப்ப-வற்றிப்போக, புலர்வா நா-புலர்ந்து வாடுகின்ற நா என்னீரறியா தீர்போல - நீர் பிரியின் உயிர் போகும் எனது நீர்மையை அறியாதவர் போல, நின்னீர் - நின்னுடைய பண்புகள் சூழாதே -கருதாதே)

இக்காட்சியில், துன்பங்கள் மிகுந்த கானகத்தில் தன் காதலனைத் தனியே அனுப்ப விரும்பாது தானும் உடன் சென்று துன்பங்கள் தொலைக்கும் இன்பத்துணையாகப் பயன் பட விரும்பும் ஒரு பெண்மை யுள்ளம் தோன்றக் காண்கிறோம். துன்பங்களைப் பகுத்துக்கொண்டு வாழும் காதல் இலக்கணமுந் தெரிகிறது.

## பொல்லாப் பொருளும் நல்லோர் செயலும்

இவ்வாறு தோழியும் தலைவியும் பலபடக் கூறித்தடுத்தும், தலைவன் மீண்டும் பிரிதல் விரும்பினனாகவே ஆயினான். அதைக் கண்ட தோழி எந்தச் செல்வத்தைத் தலைவன் தேடிச் செல்கிறானோ அதனது நிலைமையைக் கூறித் தலைவியோடு உடன் போக்காகச் செல்லும் செலவே இன்பம் தரத்தக்கது என்று அவன் செலவை நிறுத்திவிடக் கூறுகிறாள். அங்ஙனம் கூறுகின்ற தோழி பொல்லாப் பொருளின் இயல்பையும் அதைப் பொறுத்தவரை நல்லோர் நடந்துகொள்ளும் முறைமையையும் உலகியல் தோன்ற எடுத்து விளக்குகிறாள்- இதோ தோழியின் கூற்றுத் தரும் காட்சி : - தலைவனே! தான் பொருத்தி மனதாற் கொண்ட மனிதர்களைத் தான் பிரியுங்காலத்துப் பிறரெல்லாம் இகழும்படி அவர்தம் மனவலி இழக்கும்படி அவர்களை நீங்கும் பொருளினுங் காட்டில் நிலை பேறில்லாத பொருள்களை நல்லோர் விரும்புவாரோ? விரும்பமாட்டார்கள் காண்.

தமக்குப் பெருமை பெருகும்படியாகத் தாம் பெறுகின்ற பயனைப் பாராதே அரசர் தமது ஆக்கத்தை முயன்றும் அமைச்சரைக் கோபிக்கும் நேரத்தில், நமது காரியத்தை செய்தவரென்ற கண்ணோட்டமு மின்றி அவரது பொருளையன்றி உயிரையும் கொள்ளும் அரசினும் காட்டில் நிலை பேறில்லாத செல்வத்தை அறிவுடையோர் விரும்புவார்களோ? விரும்பார்காண்! ஆகையால் நீ இப்பிரிவை விரும்புதல் கூடாது, விரும்பின் தலைவியுடன் உடன் போக்கை விரும்புக

"மரீஇத்தாம் கொண்டாரைக்
கொண்டக்காற் போலாது

பிரியுங்காற் பிறரெள்ளப்
பீடின்றிப் புறமாறும்
திருவினும் நிலையிலாப்
பொருளையும் நச்சுபவோ?
புரைதவப்பய னோக்கார்
தம்மாக்கம் முயல்வாரை
வரைவின்றிச் சேறும் பொழுதிற்
கண்ணோடா துயிர்வவ்வும்
அரைசினும் நிலையிலாப்
பொருளையும் நச்சுபவோ?

(மரீஇ - மருவி, பீடின்றி - பெருமையின்றி, புறமாறும் - நீங்கும், நச்சுபவோ - விரும்புவார்களோ, புரைதவ - பெருமைமிக, ஆக்கம் - செல்வம்)

இக்காட்சியில் பொருளின் பொது இயல்புகளையும், அதனால் விளையும் ஒரு சில கேடுகளையும் தோழி அழகாக எடுத்துத் தலைவனுக்கு உரைத்து, அவன் மனம் மாறும்படி செய்து அவன் தலைவியோடு உடன் போக்கு மேற்கொள்ளுதற்கு ஊக்குகின்றாள். தோழியின் பொருளாதார ஆராய்ச்சியை நாம் வியக்க வேண்டி இருக்கிறது. அதோடு தலைவன் மனமும் மாறத், தொடங்குகிறது.

## பெற்ற உரிமையும் உற்ற பயனும்

தலைவன், தனது எண்ணத்தை மாற்றிக்கொண்டு தலைவியுடன் உடன் போக்காகச் செல்லுதற்கு ஒப்புக்கொண்டு விடுகிறான். தோழி தனது சொல்வன்மை வெற்றி பெற்றமைக்காக மட்டற்ற மகிழ்ச்சி கொள்ளுகிறாள். அவனும் அவளும் உடன் போக்காகச் சென்று விடுகிறார்கள். தன்மகள் அவள் காதலுக்குரிய ஆண் மகனொருவனோடு உடன்போனதைச் செவிலித்தாய் அறிந்து கொள்ளுகிறாள். தான் பெற்ற உரிமையாகிய தன் மகள் பருவம் வந்ததும் பிறள் மகன் ஒருவனுக்குப் பயனுற்றுவிட்டதை அவளாற் பொறுக்க முடியவில்லை. தன் மகளும் அவனும் சென்ற வழியே பின் தேடிச்செல்லுகிறாள் செவிலித்தாய். அங்ஙனம் பின் தேடிச் சென்ற செவிலி எதிரே சில அந்தணர்களைச் சந்திக்கிறாள். அவர்களிடம் "என் மகள்

ஒருத்தியும் பிறள் மகன் ஒருவனும் தம்முள்ளே ஒத்த காதலினராய் இவ்வழியே செல்லக் கண்டதுண்டோ? என வினவுகிறாள்.

அதற்கு அவர்கள் கூறும் பதிலிலேயே பெற்ற உரிமையும் பயனும் எவ்வியல்பின என்பது நன்கு விளங்குகிறது! நின் மகளைப் பெற்ற உரிமை நினக்கு உண்டாயினும் அவள் பருவகாலத்தில் தன் காதலுக்குரிய ஆண்மகனொருவனுக்கே பயன்படுவாள். உரிமை உன்னுடையது, பயன் அவளுடையது. இத்தகைய வேறுபாடு தத்துவ ரீதியாகப் பொருந்தாத தொன்றன்று. இதோ சில தத்துவங்களைக்கூறி உரிமையும் பயனும் வேறுபடுவதை விளக்குகிறோம்.

சந்தனம் மலையிலே வளர்ந்த மரத்திலிருந்துதான் கிடைக்கிறது! ஆனால் அதன் குழம்பைப் பூசிக்கொள்வார்க்கன்றி உரிமை பெற்ற மலைக்கு அவை பயன் படுவன அல்ல. உன் மகளும் உனக்கு உரியளாயினும் அவள் காதலனுக்கே பயன்படுகிறாள். அழகிய வெண்முத்து நீரிலே பிறந்தாலும் கோத்து மாலையாக அணிபவர்க்கன்றி நீருக்கு அவை என்ன பயன்தர முடியும்? உன் மகளுடைய பயனும் அப்படியே. யாழிலே பிறக்கின்ற இன்னிசை கேட்போர்க்கு அன்றி யாழுக்கு என்ன பயனைத் தரமுடியும்? உன் மகளும் அப்படியே. ஆதலால் பெற்ற உரிமை கொண்டு நீ அவர்கள் காதலை விலக்க வேண்டாம். பயன் என்பதன் பொருத்தம் இதுதான்.

**"பலவுறு நறுஞ்சாந்தம்**
**படுப்பவர்க் கல்லதை**
**மலையுளே பிறப்பினும்**
**மலைக்கவைதாமென் செய்யும்**
**சீர் கெழுவெண்முத்தம்**
**நீருளே பிறப்பினும் நீர்க்கு**
**அவைதாம் அணிபவர்க்கு**
**அல்லாத என் செய்யும்**
**ஏழ்புணர் இன்னிசை**
**முரல்பவர்க்கல்லதை**
**யாழுளே பிறப்பினும்**

*யாழ்க்கவைதாமென் செய்யும்*
*சூழுல்கால் நும்மகள் நுமக்கும்*
*ஆங்கு அனையவளே"*

*(படுப்பவர் -பூசிக்கொள்வார், சாந்தம் - சந்தனமரம், சீர்கெழு - பெருமை பொருந்திய, நீர் - (இங்கே) கடல், ஏழ்புணர்-ஏழு நரம்புகள், முரல்பவர் - படுபவர், சூழுங்கால் - ஆராயுமிடத்து.*

*உரிமையும் பயனும் வேறுபடுவதைத் தத்துவ ரீதியாக விளக்குகிறது இக்காட்சி*

## வாடிய மலர்

*உடன் போனவர்கள் திரும்புகின்றனர். திருமணம் செய்துகொண்டு இன்புற்று வாழ்கின்றனர். இப்படிச் சில நாட்கள் கழிகின்றன. தலைவன் மீண்டும் பிரிய நேரிடுகிறது. அகவாழ்வில் இன்ப ஈடுபாடுடைய தலைமகன் புற வாழ்க்கையிலும் தன்னுடைய கடமையைச் செய்ய வேண்டியிருக்கிறதே. அதற்காகவே பிரிவு நேரிடுகிறது. தலைவிக்கு அப்பிரிவை ஆற்றிக் கொள்ளும் வன்மை சிறிதும் இல்லை. யானும் உடன் வருவேன் என்று வற்புறுத்திக் கூறுகிறாள்.*

*தான் உடன் வருவதன் இன்றியமையாமைக்கு அவள் கூறுங் காரணங்கள் மிகப் பொருத்தமாக இருக்கின்றன. பிரிந்தவர்கள் இன்னஇன்ன பொருள்கள் போல இன்ன இன்ன துன்பங்கள் எய்துகின்றனர். யானும் அத் துன்பங்களை எய்தி ஆற்றியிருக்க முடியாது. ஆதலால், நின்னைப்பிரிந்து "வாடிய மலர்" போல யான் இருக்க விரும்பவில்லை. நின்னுடனேயே வருவேன் என்கிறாள். தலைவி அவளிடம் கூறுகிறாள்.*

*"தோளின் நலத்தைப் பலமுறை நுகர்ந்து தம் கணவரால் துறக்கப்பட்ட மகளிர், நீருண்ணும் வேட்கையாலே நீர் குடித்த பின்னர் எச்சிலாக்கி அப்புறம் எறிகின்ற பனை ஓலையாற் செய்த தொன்னையை ஒப்பர்.*

*"தம்மனம் விரும்பிய கணவர் நலம் நுகர்ந்து பின் தனியே விடப்பட்டுப் பிரிவெய்திய மகளிர், குடியிருப்பேரெல்லாம் வேறோரிடம் போகப் பாழ்படும் ஊரை ஒப்பார்."*

தம் மனம் விரும்பிய கணவர் இன்புற்றுத்,தனியே இருக்கப் பின் பிரிவெய்திய மகளிர், வனப்பும் செவ்வியுமுள்ளபோது கூந்தலிற் சூடிப் பின் வாடிய மலரான காலையில் தூர எறியும் நிலையை ஒப்பர். இதை நீர் நன்றாகச் சிந்தித்துப் பாரும். நானும் அத்தகைய வாடிய மலராக ஆக வேண்டுமோ?

"தோள் நலம் உண்டு
துறக்கப்பட்டோர்
வேள்நீர் உண்ட
குடையோ ரன்னர்
நல்கு நர் புரிந்த நலன்
உணப் பட்டோர்
அல்குர் போகிய
ஊரோ ரன்னர்
கூடினர் புரிந்து
குணனுணப்பட்டோர்
சூடினர் இட்ட
பூ வோ ரன்னர்"

(துறக்கப்பட்டோர் - பிரியப்பட்டோர்; வேள்நீர்- வேட்டநீர்; குடை-பனை ஓலையாற் செய்த தொன்னை; நல்குநர்-காதலர்; அல்குநர்-வசிப்பவர்; சூடினர்-பூவையணிந்தோர்; குணன்-இன்பச்செல்வி)

இக்காட்சியில், தலைவனுக்குத் தனது பிரிவாற்றலருமையை எடுத்துக் காட்டுக்களோடு மறுக்க முடியாத முறையில் வழங்குகிறாள் தலைமகள்.

## இளவேனில் வந்தது

தலைவி தான் எவ்வளவோ எடுத்துக் கூறியும் தலைவன் கேட்கவில்லை. அவன் பிரிந்து சென்று விட்டான். நாட்கள் கழிந்தன. தலைவியும் எப்படியோ அவன் பிரிவை ஆற்றிவருகிறாள். ஆனால் இதோ அழகிய இளவேனிற்காலம் வந்து விட்டது. இளவேனிற் காலத்துக் காட்சிகள் ஒவ்வொன்றும் அவளுக்குத் தலைவனை நினைவூட்டுகின்றன.

அந்நினைவுஅவ்ளை மிகவும் வருத்துகிறது. தலைவியின் வருத்தத்தைக் கண்டு தோழி "இத்தகைய எழில் நலம் மிக்க இளவேனில் காலமும் வந்தது. ஆனால் பிரிந்து சென்ற தலைவர் இன்னும் வரவில்லை" என்று கூறுகின்றாள்.

**தோழியின் இளவேனில் வருணனை:**

"கொடுமையும் வலிமையும் உடைய கலப்பையையுடைய பலராமன் அணிந்த மாலையைப் போன்ற அழகிய வெண் கடம்ப மரத்தின் உயர்ந்த கிளையில் அழகிய மயில்கள் தோகை விரித்து ஆடுகின்றன. யாழில் உள்ள நரம்புகள் இன்னிசை எழுப்புவது போல் வண்டுகளின் கூட்டம் ரீங்காரம் செய்கிறது. கையிலே வளைகளையணிந்த பெண் வீணை வாசிக்கும்போது வீணையொலியும் வளைகளின் ஒலியும் ஒருங்கே ஒலிப்பது போலத் தும்பிகள் ஒலி செய்கின்றன. குளங்களினையுடைய சோலைகளுள்ளே மலர்ந்த மலர்களை நோக்கி வண்டுகள் தேனுண்ண ஊதுகின்றன. மரங்கள் தோறும் கொத்துக் கொத்தாய் அலர்ந்துள்ள மலர்கள் போவோர் வருவோரைத் தம்மைக் கொய்ய அழைப்பன போன்று இருந்தன. கரியகுயில்கள் இசை பாடின. பெரிய நீர்த்துறைகள் ஆடுவோர் மிகுந்தமையாற் கவின் பெற்றன இளவேனில் திருவிழா எதிர்த்து வந்தது. சீர்மை பொருந்திய காலம் இந்த இள்வேனில். ஆனால் காதலர் இன்னும் வரவில்லை.

"கொடுமிடல் நாஞ்சிலான்
தார் போல் மராஅத்து
நெடுமிசைச் சூழுமயில்
ஆலும் சீர
வடிநரம்பு இசைப்ப போல்
வண்டொடு
சுரும்பு ஆர்ப்பத்
தொடிமகள் முரற்சி போல்
தும்பி வந்து இமிர்தர இயன்
எழீ இயவை போல
எவ்வாயும் இம் எனக்

கயனணி பொதும் பருள்
கடிமலர்த் தேனூத (மலராய்ந்து
வயின் வயின்
விளிப்ப போல் மரன்
ஊழ்ப்ப இருங்குயில்
ஆலப் பெருந்துறை
கவின் பெறக்
குழவி வேனில்
விழவெதிர் கொள்ளும்
சீரார் செவ்வியும்
வந்தன்று
வாரார் தோழி நம்
காத லோறே

(மிடல் - வலிமை, தார் - மாலை, நாஞ்சில் - கலப்பை, மராஅத்து - மரத்தில், நெடுமிசை -உயர்ந்த கிளையில், ஆலும் - ஆடும், வடிநரம்பு - வடித்த நரம்புகள், வண்டு - ஆண்வண்டு, சுரும்பு - பெண்வண்டு, தொடி மகள் - வளையணிந்த பாடகி, பொதும்பர் - சோலை, முரற்சி - ஒலி, ஊழ்ப்ப - மலர, செவ்வி - காலம்)

இக்காட்சியில் இன்பநினைவு ஊட்டும் இளவேனிலை தோழி சித்திரமாக வரைந்து வருணிக்கிறாள். அதில் அழகு தோற்றம் பெறுகிறது.

## குறிஞ்சிக் கலி

குறிஞ்சி என்பது மலையும் மலை சார்ந்த இடமும். அவைகளை நிலமாகக்கொண்டு நிகழுங் காதல் நிகழ்ச்சிகள் இத்திணையில் இடம் பெறும். காதலின் தோற்றத்திற்கும் படிப்படியான வளர்ச்சிக்கும் இது நிலைக்களனாக அமைகிறது. அழகும் நலனும், ஒருங்கே வாய்க்கப் பெற்ற மகள் ஒருத்தியும் மகன் ஒருவனும் முதல் முதலிற் சந்திக்கும்போது தோன்றும் உணர்ச்சியே காதல். அங்ஙனம் சந்திக்கும் ஒருத்தியும் ஒருவனும் நடத்தும் காதல் நாடகத்தை கலித்தொகை ஓவியமொன்று காட்டுகிறது.

# காதல் நாடகம்

தலைவனுக்கும் தலைவிக்கும் காதலுண்மையைத் தோழி தலைவியை நாடி அறிந்து கொள்ள அவர்கள் நடத்திய காதல் நாடகத்தை தான் நடத்தியதுபோலக் கூறுகிறாள். அந்த நாடகத்தில் அவர்கள் சந்திப்பிலே தோன்றும் முதற்காதல் அழகிய முறையில் முகிழ்ப்பதை அறிய முடிகிறது. தோழி கூறுகிறாள்! "தினைப்புனங்களில் கிளிகள் வாரா வண்ணம் யான் காத்து வருங்கால், தினைப்புனத்தின் பக்கத்திலுள்ள மரத்தில் தொங்கவிடப்பட்ட ஊசலில் ஒரு நாள் ஆடிக்கொண்டிருந்தேன். அப்போது அங்கோர் இளைஞன் வந்தான். நான் அவனை "நீ இவ்வூசலைச் சிறிது ஆட்டுவாயாக" என்றேன், அவனும் அதற்கு உடன்பட்டு, "பெண்ணே! நீ கூறியது நன்று" , என்று கூறி என் ஊசலை ஆட்டினான், அவன் ஆட்டும் போது, அவன் மார்பில் கை நெகிழ்ந்து யான் வீழ்ந்தேன்.

நான் பொய்யாக வீழ்ந்ததை அவ்விளைஞன் உண்மையாகக் கருதி, உடனே என்னை விரைய எடுத்துத் தழுவிக்கொண்டான். அவனுடைய தழுவலிலே யான் மயங்கியிருக்க, "நீ போவாயாக" என்று கூறி அவ்விளைஞன் என்னை விடுவித்தனன் அவன் போனபின் நான் மெய் மறந்து நின்றேன். என்று தோழி தலைவி செய்த செயல்களைத் தான் செய்ததுபோலக் கூறி உண்மையை நாடுகிறாள். ஊஞ்சலாடும் போது, பொய்யாக விழுந்து காதலனை அடைந்தது தலைவியின் காதல் நாடகந்தானே? நடிப்பது நாடகம். தலைவியின் காதல் நடிப்பே இங்கே நாடகம்.

"ஏனல் இனக்கிளி
யாங்கடித்து ஓம்பும்
புனத்தயல் ஊச லூர்ந்தாட
ஒரு ஞான்று
வந்தானை ஐய! சிறி தென்னை
யூக்கி எனக்கூறத்
தையால் நன்று என்றவ
னூக்கக் கை நெகிழ்பு

பொய்யாக வீழ்ந்தே னவன்
மார்பின் வாயாச் செத்
தொய்யென வாங்கே எடுத்
தனன் கொண்டான் மேல்
மெய்யறியா தேன்போற்
கிடந்தேன் மன்னாயிடை
மெய்யறிந் தேற்றெழுவே
னாயின்மற் றொய்யென
ஒண்குழாய் செல்கெனக்
கூறி விடும்பண் பின்
நின்கண்ஊ உடையன்
அவன்

(குறிஞ்சிக்கலி)

(ஏனல் - தினைப்புனம்; ஊக்கி-ஆட்டுவாயாக; தையால் - பெண்ணே; கைநெகிழ்பு-கைதவறி; ஒய்யென-விரைவாக; ஆயிடை-அவ்விடத்து; ஒண் குழாய்-ஒளியான குழையாய்)

இதனுள் முதற்காதலில் நிகழும் ஒரு நடிப்புக் காட்சி தெரிகிறது.

## கள்வன் மகன்

அவளது இளமை தொட்டே அவன் அவளுக்குக் காதலன், இளமையில் அவள் தெருவில் விளையாடும் போது அவள் கட்டிய மணற்சிறு வீடுகளை அவன் காலால் அழிப்பான். அப்படிப்பட்ட அவன் (பின்னொரு காலத்து) அவள் பருவமடைந்த காலத்து, அவளும் அவள் தாயும் வீட்டிலி ருக்கும்போது வந்து குடிக்கத் தண்ணீர் கேட்டுத் தண்ணீர் கொணர்ந்த அவள் கையைப் பிடித்துவிட்டான். அதோடு போகவில்லை; அவளது உள்ளத்தையும் திருடிக்கொண்டு போய்விட்டான் அந்தக் "கள்வன் மகன்" இந்த நிகழ்ச்சியைத் தலைவியே தோழிக்குக் கூறுகிறாள் : "ஒளிபொருந்திய வளைகளை அணிந்த தோழி கேட்பாயாக : தெருவில் நாம் மணற்சிறுவீடு செய்து விளையாடுங்காலத்து, அவைகளைக் காலால் அழித்து நமது கூந்தலிலே அணிந்த பூப்பந்தை

அறுத்துக்கொண்டு ஓடி நாம் வருந்தத்தக்கனவற்றைச் செய்யும் சிறியோன். முன்னொரு நாளில், நானும் தாயும் வீட்டிலிருக்கும்போது வந்தான்.

இவ்வீட்டில் வசிக்கின்றவர்களே, பருகநீர் வேண்டுமென்றான். அதுகேட்ட என் தாய் என்னை அவனுக்குப் பொன்னாற் செய்யப்பட்ட குவளையில் நீர்கொண்டுபோய் நீர் உண்ணப் பண்ணு" என்றாள். யானும் அவன் நமது பழைய வீடுகளை அழித்தவன் என்று அறியாதே உண்ணும் நீர் கொண்டு சென்றேன். அங்ஙனம் நீர்கொண்டு சென்ற என் வளையணிந்த முன் கைகளை அவன் பற்றினான். அதுகண்டு யான் திடுக்கிட்டு "அம்மா இதோ இவன் என்ன செய்கிறான் பார்?" என்று என் அன்னையைக் கூவினேன். உடனே அன்னை அலறி ஓடி வந்தாள். யான் அவன் செய்ததை மறைத்து அன்னையிடம்,நீர் உண்ணும்போது விக்கி வருந்தினான் என்றேன். நான் சொன்னது பொய்தான். தாய் உடனே அவன் முதுகைத் தடவி விக்குள் தணித்தனள். அதன்பின் அக் "கள்வன் மகன்" என்னைத் தன் கடைக் கண்களால் நோக்கி நகைசெய்தான். உள்ளம் திருடப்பட்டுவிட்டது.

"சுடர்த் தொடீ கேளாய்
    தெருவில் நாமாடும்
மணற் சிற்றில் தாவிற்
    சிதையா அடைச்சிய
கோதை வரிப்பந்து
    பரிந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ்
    சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானும்
    இருந்தேமா வில்லிரே
உண்ணுநீர் வேட்டேன்
    எனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால்
    வாக்கிச் சுடரிழாய்
உண்ணு நீர் ஊட்டிவா

வென்றாள் எனயானும்
தன்னையறியாது
சென்றேன் மற்றென்னை
வளைமுன்கை பற்றி
நலியத் தெருமந்திட்டு
அன்னாய் இவனொருவன்
செய்தது காண் என்றேனா
அன்னை அலறிப்
படர்தரத் தன்னையான்
உண்ணு நீர் விக்கினா
னென்றென அன்னையுந்
தன்னைப் புறம்பழித்து
நீவமற் றென்னைக்
கடைக்கண்ணாற் கொல்வான்
போல்நோக்கி நகைக் கூட்டம்
செய்தான் அக்கள்வன் மகன்"

(குறிஞ்சிக்கலி)

(தொடி-வளையல்; சிதையா-சிதைத்து; அடைச்சிய-சூடிய; பரிந்து-அறுத்து நோதக்க-வருந்தத்தக்கன; சிறிபட்டி - விடலைச் சிறுவன்; சிரகம் - ஒருவகைக் கோப்பை; நலிய - வருந்த; புறம்பழித்து - முதுகிற்றடவி ; நீவ - தடவ)

## காதலின் எழுந்த பாராட்டு

தலைவன் தலைவியைப் பாராட்டுகிறான். அவள்மேல் அவனுக்குள்ள அளவு கடந்த காதல் அவனைப் பாராட்டச் செய்கிறது. தலைவி அப்பாராட்டுதல்களாலே ஒரு தனிப் பெருமை எய்துகிறாள். ஆனால் பெண்மைக்கு இயல்பாகிய நாணம் அப்போதும் அவளிடம் எழுந்து ஒளிரவே செய்கிறது. தலைவன் தன்னைப் பாராட்டியதை அவள் தோழியிடம் தானே கூறித் தனது நாணத்தின் பெருமையையும் எடுத்துரைத்து விளக்குகிறாள். இதோ தலைவி கூறுகிறாள் : "அழகிய நெற்றியையுடைய தோழீ! யான் இப்போது உன்னிடம் ஒரு செய்தியைக் கூறப்போகிறேன்; அதைக் கேட்பாயாக. ஒருநாள்

தலைவனும் யானும் சந்தித்து முடிவிற் பிரிந்தோம். அங்ஙனம் நான் பிரிந்துபோகும்போது அவன் திடீரென்று ஏதோ நினைத்தவன் போல, என்னைநோக்கி "நீ போகாதே நில்" லென்று கூறினான். நான் நின்றேன்.

அவன் என் அருகே வந்து எனது, நெற்றியையும், முகத்தையும், தோளையும், கண்ணையும், சாயலையும், சொல்லையும், நோக்கி அவைகளுக்கு உரிய உவமைகளை எடுத்துரைக்க எண்ணி, "நினது நெற்றி பிறையை போலத் தேய்ந்தாயினும் கண்டார்க்கு வியப்பை யுண்டாக் குதலி னாற் பிறையுமன்று. முகம் மதி போன்றதாயினும் களங்கமில்லையாதலினால் மதியுமன்று. தோள் மூங்கில் போன்றதாயினும் அம்மூங்கில்கள் போல இவை மலையிற் பிறத்தலின்மையின் அதுவுமன்று.

கண் பூப்போன்றதாயினும், அப்பூக்கள் சுனையில் பூத்தல் போல இவை சுனையிற் பூவாமையின் அதுவுமன்று. சாயல் இருந்தபடி இருத்தலின் மெத்தென நடக்கும் மயிலுமன்று. சொல்லுச் சொல்லுங் காற் றளருமாயினும் கூறியதே கூறாமையிற் கிளியையும் ஒத்தது அன்று என்று அவ்விடத்திலே எனது அங்கங்களை யெல்லாம் பலபடப் பாராட்டினான். அவன் காதலின் மிகுதியினாலே பொய்யாகக் கூடப் புனைந்து உரைத்துவிட்டான். காதல்தானே அவனை அப்படிப் பாராட்டச் செய்கிறது என்று தலைவன் தன்னைப் பாராட்டியதாலும் தான் நாணழியாமையைத் தலைவி தோழியிடம் எடுத்துக் கூறுகிறாள்.கூறும் முறைமையே ஒரு திறமை.

"நில்லென நிறுத்தான்
நிறுத்தே வந்து
நுதலும் முகனும்
தோளும் கண்ணும்
இயலும் சொல்லும்
நோக்குபு நினை இ
ஐதேயந் தன்று
பிறையும் அன்று
மைதீர்ந்தன்று
மதியும் அன்று

வேயமன்றென்று
மலையும் அன்று
பூவமன்றன்று
சுனையுமன்று
மெல்லஇயலும்
மயிலும் அன்று
சொல்லத் தளருங்
கிளியுமன்று
என்வாங்கு அனையன
பல பாராட்டி

(குறிஞ்சிக்கலி)

நுதல்-நெற்றி; இயல்-சாயல்; நோக்குபு-பார்த்து, நினைஇ-எண்ணி, ஐ-வியப்பு; மை-களங்கம்; வேய்-மூங்கில்; அமன்று - தோன்றி ; தளரும்-தளர்வெய்தும்

(இதனுள் தலைவன் தலைவியைப் பாராட்டும் பாராட்டில் காதல் எழுந்து விளக்கம் பெறுகிறது)

ஊரின் நடுவில் ஓர் அழகிய பூங்சோலை. ஒருநாள் ஓர் இளைஞன் அந்தப் பூங்சோலைக்குச் செல்லுகிறான். சோலையைச் சுற்றிப்பார்க்கிறான். ஓரிடத்திற்கு வந்ததும் திடீரெனப் பிரமித்து நின்று விடுகிறான். தழைத்து வளர்ந்து பூத்துக்குலுங்கும் ஒரு புன்னை மரத்தடியில் பூங்கொடி யொருத்தி நிற்கிறாள். காளை அவளைக் கண்டான். காதல் வேகத்தில் பிதற்றத் தொடங்கிவிட்டான் : "ஊரின் நடுவிலே வளர்ந்த பூங்காவினுள்ளே நீர் ஓடுகின்ற சிறிய வாய்க்காலின் அருகே ஒரு புன்னைமரம். பரந்த நிழலும் அலர்ந்து முதிர்ந்த பூக்களைப் பறித்துக்கொண்டு நின்றாள் ஒரு பெண்கொடி. வாரி முடித்திருந்த அவளுடைய கரிய கூந்தல் நெகிழ்ந்து தோளிலே புரண்டுகொண்டிருந்தது. பூரண சந்திரன் தனது இனிய கதிர்களைப் பரப்பினாற்போல ஒளிபரப்பிக் கொண்டிருந்தது அவளுடைய முகம்.

அவள் என்னை நோக்கி வந்தாள். யான் இவ்வண்ணம் இங்கே வரும் இவள் யார் என்று ஐயுற்றேன்? இம்மலையிலே உள்ள

கைத் தொழில்வல்ல ஒருவனாற் செய்யப்பட்ட பாவையே அன்றி வேறொரு நாட்டு மனிதனாலே அழகிய உறுப்புக்களெல்லாம் கூட்டி இயற்றப்பட்ட சுதையுருவோ? அன்றி, உயிர் கொன்று கொன்று அத்தொழிலில் வெறுப்புற்ற கூற்றுவன் கொண்ட வேற்றுருவமோ? பளபளவென்று மின்னிப்பொலியும் மேகலையும் பூங்கலிக்கத்தையும் அணிந்த இவள் பிள்ளை இல்லாது வெகுகாலம் வருந்தினவர்களுக்குப் பிறந்த ஒற்றைத் தனிச்செல்லப் பெண்ணோ? இவளுடைய பெற்றோர்கள் இவளைக் காவல் செய்யாது புறம் விடுதல் என்போன்றார். துன்புறுதற்கு ஏதுவாகும்" என்று கைக்கிளை பேசுகிறான் அவ்விளைஞன். பெண்மையின் அழகைக் கண்டு ஆண்மை ரசிக்கும் முறையை இக்காட்சியுள் காணமுடிகிறது.

"ஊர்காவல் நிவந்த
பொதும் பருள் நீர்க்கால்
கொழுநிழல் ஞாழல்
முதிர் இணர் கொண்டு
கழும முடித்துக்
கண் கூடு கூழை
கவன் மிசைத்தாதொடு
தாழஅகன்மதி
தீங்கதிர் விட்டது
போலமுகனமர்ந்
தீங்கே வாருவாள் இவள்யார்
கொல் ஆங்கே ஓர்
வல்லவன் தைஇய
பாவை கொல்நல்லார்
உருப்பெல்லாங் கொண்டியற்
றியாள் கொல் வெறுப்பினால்
வேண்டுருவங் கொண்டதோர்
கூற்றங் கொல் ஆண்டார்
கடிதிவளைக் காவா
விடுதல்கொடியியற்
பல்கலைச் சில்பூஇ
கலிங்கத்தள் ஈங்கிதோர்

நல்கூர்ந்தார்
செல்வமகள்"

(குறிஞ்சிக்கலி)

பொதும்பர்-சோலை; நீர்க்கால்-நீரோடும் வாய்க்கால்; ஞாழல்-புன்னை; பூங்கொத்து; கழுமமுடித்து-வாரிமுடிந்து, கூழை-கூந்தல்; சுவன்மிசை-தோள்களின்மேலே; தைஇய-இயற்றிய; கூற்றம்-யமன்; ஆண்டார். பெற்றோர்; கலைமேகலை; கலிங்கம் -துகில்; நல்கூர்ந்தார் - பிள்ளையில்லாதார்

இக்காட்சியில் சோலை நடுவில் ஓர் சுடர்க்கொடியைக் காணும் ஆடவனுடைய முதற்காதலின் மனவெழுச்சி கண்டதைப்பற்றி வருணித்துப் பேசும் பேச்சுமூலம் நமக்குத் தெளிவாக விளங்குகிறது.

## நினைத்ததும் நடப்பதும்

### மருதக்கலி

"பிரிந்து சென்ற தலைவன் வந்தால் அவனோடு ஊடவேண்டும் என்று உறுதி செய்து கொள்கிறாள் தலைவி. அவன் வந்தால் பிணங்காமல் முகங்கொடுத்துப் பேசுதல் கூடாது என்றும் முடிவுசெய்து கொள்ளுகிறாள். இது தலைவன் வருவதற்கு முன்பு அவள் நினைத்தது. எந்தச் செயலையும் விரைவாகத் தொடங்கி மெதுவாக முடிப்பது பெண்மையின் இயல்புகளுள் ஒன்று. தலைவன் வந்தான். தலைவி அவனைக் கண்டாள். ஐந்து புலன்களும் கண்களே ஆகிக் கண்டாள். தன்னை மறந்தாள். தன் உறுதியை மறந்தாள். ஓடிச்சென்று தலைவனைத் தழுவிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் அவள் நெஞ்சில் முகிழ்த்தது.

ஊடவேண்டும்-பிணங்க வேண்டும் என்ற உறுதிகள் எங்கோ ஓடிப்போயின போலும். மறுநாள் தனியாக இருக்கின்றாள் தலைவி. முதல்நாள் வந்திருந்த தலைவன் மீண்டும் பிரிந்து சென்றிருக்கிறான். தலைவிக்கு இப்போதுதான் தன்னுடைய உறுதிகள் நினைவுக்கு வருகின்றன."நினைத்த எண்ணத்தை

இறுதிவரை கடைப்பிடித்து வெற்றிகாண முடியாதவர்களுக்குத் தாம் எண்ணியவை எல்லாம் வெற்றி எய்த முடியுமா?"இது ஏமாற்றத்தால் ஏற்பட்ட அவலச்சுவை பொருந்திய தலைவியின் சொற்கள்

"புலன்பேன்யான் என்பேன்மன்
அந்நிலையே அவற்காணின்
கலப் பேன்யான் என்னுமிக்
கையறு நெஞ்சே
ஊடுவேன் என்பேன்மன்
அந்நிலையே அவற்காணின்
கூடுவேன் என்னும் இக்
கொள்கையில் நெஞ்சே
துனிப்பேன்யான் என்பேன்மன்
அந்நிலையே அவற்காணின்
தனித்தே தாழுமித் தனி நெங்சே
தாமெண்ணியவை
எல்லாம் துறைபோதல்
ஒல்லுமோதூகாவா
தாங்கறை போகும்
நெஞ்சுடையார்க்கு"

(கலித்தொகை : மருதம்)

(புலப்பேன்-ஊடுவேன் ; கையறுதல் - இரங்குதல் - துனிப்பேன் - பிணங்குவேன்; தாழும் - விரும்பும்; துறைபோதல்-நன்கு முடிவு எய்தல் ; ஒல்லுமோ-முடியுமோ; தூகாவாது-முற்றக்காவாது ; அறைபோதல்-இழுத்தல் ; நெஞ்சுடையார்-பெண்கள்)

"ஊடற்கண் சென்றேன் மன்தோழி அதுமறந்து
ஊடற்கண் சென்றதென் நெஞ்சு
என்று வள்ளுவர் இதை வரைந்து காட்டினார்

## கனவிற் பெற்ற செல்வம்

"தலைவன் எம்மனைக்கு ஒரு காலத்தில் வருவானாயின் அவனைப் பெற்று அரும்பெரும் இன்பமுற்று மகிழ்வோம் பின்பு

அவன் நீங்கினால் எம்முடைய பொன்போலும் தோள்கள்வாடும். வாட்டங்கண்டு ஊரவர் வம்பு பேசுவர். அதுகண்டு யான் அளப்பரிய பெருந்துன்பமுற்று அவனை முன்போலத் தழுவி முற்றும் மகிழ்வெய்தக் காத்திருப்பேன். அவன் வருவான். நான் மனமகிழ்ந்து தழுவுவேன்.ஆனால் அவன் மனத்தோடு பொருந்தாது பொய்யாகத் தழுவுவது போல நடிப்பான்.அதைக் கண்டு என்னுள்ளம் அல்லலுறும். அங்ஙனம் அவன் போலியாகத் தழுவும் பொய்மையில் யான் இன்பம் என்பதையே காண்முடியவில்லை. அது கனவிற் பெற்ற செல்வம்போலக் கணப்பொழுதில் மறைந்து விடுதிமியல்பினது. உடுத்த உடையும் இருக்க இடமும், உண்ண உணவும் அற்ற ஏழையொருவன் ஒரு நாளிரவு கனவில் பொன்னும் மணியும் முத்தும் குவித்த செல்வக் குவியலுக்கு உடையவனாகி விட்டதாகக் கனவு காண்கிறான். அதனாற் பயன்? எழுந்தான், விழித்தான். ஏமாந்தான். அதுபோலத்தான் எனக்கும் தலைவனது போலித் தழுவுதல் பொய்மையாகத் தோன்றுகிறது.

"நனவினான் வேறாகும்
வேளா முயக்கம்
மனவரிற் பெற்றுவந்து
மற்றெந் தோள் வாட
இனையர் என உணர்ந்தார்
என்று ஏக்கற்றாங்குக்
கனவினான் எய்திய
செல்வத் தனையதே
ஐய எமக்குநின்மார்பு

(கலித்தொகை : மருதம்)

நனவு-விழிப்பு; நிகழ்ச்சி; முயக்கம்-தழுவுதல், மனை-வீடு

## நீலவான் நோக்கும் நெற்கதிர்

"தலைவனே, நீ வந்த நாளைப் பெற்று அமைய முடியும் எங்களால். நின்னை இடைவிடாது விரும்பும் பிற பெண்களிடத்துச் சென்று இன்பமளிப்பாயாக, யாம் நீ வருந்துணையும் பொறுத்தாற்றி இருப்போம். நீ ஓர் ஆண்டுக்கு ஓர் முறைதான் எம்மிடத்து வருகின்றாய். என்றும் நீ எம்மிடத்தே

இருக்கவேண்டுமென்று கனவு காண்கின்ற எங்களுக்கு "உனது ஆண்டுக்கொரு முறையாகிய வரவு" நீலவான் நோக்கி நீர் நீர் என்று ஏங்கி நிற்கும் கதிர்கள் வாடக்கூடிய நெல்லிற்கு நிறையாத ஒரு துளி நீரை வானம் கொடுத்ததுபோல் இருக்கிறது. நீரே காணாது வறண்டு நீலவான் நோக்கி நிற்கும் நெற்கதிர்க்கு ஒரு துளிநீர் போதுமா? நின்முகமே காணாது வருத்தி நிற்கும் எமக்கு "நினது ஆண்டுக்கொரு முறையாகிய வரவு போதுமா? வாழ்கின்றவர்களுக்கு வானம் எப்படியோ, அப்படித்தான் பெண்களுக்குக் காதலரும். வானம் பொய்யாத வளமழை பொழிந்தால் வாழ்கின்றவர்கள் வாழ்வு செழிப்புற்றோங்கும். வானம் பொய்த்து விட்டால் வாழ்வு பாழ்பட்டு வறண்டு போகும். காதலர் இன்பம் நல்கினால்தான் பெண்மையின் வாழ்வு செழிப்புற முடியும். காதலர் பிரிந்து சென்றுவிட்டால் பெண்மையின் வாழ்வு வறண்டு போகும்.

**"வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு**
**வீழ்வார் அளிக்கும் அளி"** **(திருக்குறள்)**

வீழ்வார்க்கு - காதற் பெண்களுக்கு; வீழ்வார்-காதலர் என்று திருவள்ளுவர் கூறுகின்றார்.

**"நீ வருநாட்போல்**
**அமைகுவம் யாம் புக்கீயோ**
**மாரிக்கு அவாவுற்றுப்**
**பீள்வாடு நெல்லிற்கு**
**ஆங்கு ஆராத் துவலை**
**யளித்தது போலும் நீ**
**ஓர் யாண்டு**
**ஒருகால் வரவு"**

**(கலித்தொகை ; மருதம்)**

(அமைகுவம் - திருப்தியடைவோம் ; புக்கு ஈமோ - சென்று கொடுங்கள் ; மாரிக்கு - மழைக்கு; அவாவுற்று - ஆசைப்பட்டு; பின்வாடு நெல்-கதிர்கள் உலரும் நெல்; ஆராத்துவலை -நிறையாத ஒரு துளி மழை, யாண்டு - வருடம்)

இன்பம் என்பது, வையத்து மக்களுக்கு வானமழைபோலக் காதலர்களுக்கு அமையும் நுகர்ச்சி என்பதை இதில் தலைவியின் பேச்சு நமக்கு விளங்குகிறது. அவ்வின்பம் இல்லாவிடிலோ அன்றிக் குறைந்தாலோ காதலர் வாழ்வு வறண்டு போகிறது என்பதையும் தலைவி நயமாகக் கூறுகிறாள்.

## வலிய மலர்த்திய மென்மலர்

"பிறமகளிரிடத்துச் சென்று இன்பம் நுகர்தலால் பலரும் கண்டு வியக்கத்தக்க சிறுமைகள் எல்லாம் உனக்கு அமைந்தது. உன்னை விரும்புகின்றவர்களும் உன்னால் விரும்பப் படுகின்றவர்களும் ஆகிய பிறமகளிரும் உன்னை வெறுத்து விருப்பொழியும் படியாக இங்கே எம்மகத்தில் நில்லாதே. அவர் அகத்திற்கு உடனே செல்வாயாக, தன் இயல்பில் மலராது ஒருவரது கையினால் வலிய மலர்த்துதலினால் மொட்டு அலர்ந்தாற் போல; உன்னுடைய இனிமையும் மன ஈடுபாடுமில்லாத தழுவுதலைப் பெறுங்காலத்து குளிர்ந்த இப்பனிக் காலம் எமக்குக் கொடியதாகிய ஒன்றாயிருக்கிறது. இது தலைவி தலைவனிடத்துத் தனது பிணக்குத் தீருமுகத்திற் கூறியது.

பனிக்காலத்திற்கும் தலைவனது மனத்தொடு பயிலாத போலிக் காதலுக்கும் வலியமலர்ந்த மலர் உவமையாகின்றது. வலிய மலர்த்துகின்ற கைகள் தலைவனுடைய செயலுக்கு நேரே உவமையாக அமைகின்றன. இயல்பாக மலருங் காலமின்மை, காலத்தியைபு இல்லாத பனிக்காலத்திற்கு உவமையாக அமைகிறது. ஒருவினையைப் பிறிதோர் வினையோடு உவமிக்குங்கால் யாதனும் ஒரொப்புமை கருதி உவமித்தல் மரபு. ஆனால் பல ஒப்புமை அமையும்படி உவமித்தல் மரபிற்கும் மேற்பட்ட சிறப்பான நயம். அந்த நயம் இங்கே அமையும்படி செய்திருக்கிறாள் தலைவி.

மலரும் பருவத்திலுள்ள ஒரு மொட்டும், அதை வலியப் பிடித்து இழுத்து அலர்த்தும் இருகைகளும் தலைவனும் தலைவியும் நம் மனக்கண் முன் சித்திரமாக விரிகின்றனர் இக்கலித்தொகை மருதக் காட்சியில்.

"ஐய அமைந்தன்
 றனைத்தாகப் புக்கீமோ
வெய்யாரும் வீழ்வாரும்
 வேறாகக் கையின்
முகைமலர்ந் தன்ன
 முயக்கில் தகையின்றே
தண்பனி வைகல்"
 எமக்கு

கலித்தொகை : மருதம்

(ஐய-தலைவனே : அமைந்தன்று - பொருந்தியது. புக்குஈமோ-சென்று கொடுப்பீராக. வெய்யர்-விரும்புவார்; வீழ்வார்-விரும்பப்படுவார், கையின்-கையினால்; முகை-மொட்டு; வைகல்-பொழுது)

பனிக்காலத்தில் வந்த தலைவனுக்கு நல்ல பாடம் கற்பிக்கிறாள், தலைவி சொல்லாமற் சொல்லி விளக்குகிறாள். "வலியமலர்த்திய மென்மலர்" கருத்துக்கள் பொதிந்த அழகிய உவமை இது.

## அவன் கண்ட கடவுள்

வெகு நாட்களுக்கு பிறகு ஒரு நாள் பிரிந்து சென்ற தலைவன் மீண்டும் வந்து சேர்ந்தான். தலைவி எங்கே போயிருந்தீர்? என்று கேட்டாள். நாம் உடனுறைந்து வாழும் வாழ்கைக்கு தோன்றாத் துணையாக நின்று காத்து வரும் கடவுளர்களின் கோட்டங்களை எல்லாம் வழிபடப் போயிருந்தேன் என்று கூசாமல் ஒரு பொய்யை எடுத்துவிட்டான் தலைவன். உண்மையில் தலைவன் போயிருந்த இடம் எது என்று தலைவிக்கு நன்றாக தெரியும். தெரிந்தாலும் அவன் என்ன சொல்லுகிறான் பார்ப்போம் என்பதற்காகவே அவள் அவனை இப்படிக் கேட்டு வைத்தாள்.

அவன் போயிருந்த இடமோ பரத்தையர் சேரி. பேசுகின்ற இடமோ தூய்மையான கடவுளர் கோட்டம். பார்த்தாள் தலைவி; வஞ்சகப் பொய்யை வஞ்சகப் பேச்சாலேயே தீர்த்துக் கட்ட முடிவு செய்கிறாள். பேசுகிறாள் தலைவனை நோக்கி"நீ கண்ட கடவுளர்களுள் உன்னை மயக்கம் எய்தும் படியாக உன்

மார்பைத் தழுவினர்கள் யாவரோ? அதைச் சிறிது கூறுவாயாக. ஞானம் பற்றிய வினாக்களுக்கு அவ்வப்போது விடைகள் பகர்வோராயும், நெடியகரிய சடையையுடையவர்களுமாகிய கடவுளராகிய முனிவர்க்குக் கூட நினக்குக் கிடைக்கும் பொருள்களெல்லாம் கிடையாது முட்டுப்பாடு தோன்றுகிறது உன்னை அப்படிமயங்கச் செய்த அந்த "முனிவர்கள்" யார்தான் சொல்லு? நான் தெரிந்தது கொள்ளுகிறேன். தலைவனது நெஞ்சை வாள் போலறுக்கின்றன தலைவியின் சொற்கள். சொல்லின் செல்வியாகத் தலைவியை மாற்றுகிறது இந்தச் சந்தர்ப்பம். பெண்மை கனன்றால் புதுமை நிகழ்வது இயல்புதானே?

கண்ட கடவுளர்
 தம்முளும் நின்னை
வெறிகொள் வியன்மார்பு
 வேறாகச் செய்து
குறிகொளச் செய்தார் யார்
 செப்பு மற்றி யாருஞ்
சிறுவரைத் தங்கின்
 வெகுள்வர் செறுத்தக்காய்
தேறினேன் சென்றீ நீ
 செல்லா விடுவாயேல்
நற்றா ரகலத்துக்
 கொருசார் மேவிய
நெட்டிருங் கூந்தற்
 கடவுள ரெல்லார்க்கும்
முட்டுப்பாடகலும் உண்டு

(கலித்தொகை : மருதம்)

கடவுளர்-முனிவர், (நெறிகடக்கும் பரத்தையர்) செப்பு-சொல்லு, சென்றீ-செல்க, அகலம்-மார்பு, நெடுமை-இருமை, நெட்டிரும்(நீண்டகரிய). முட்டுப்பாடு -இடையூறு)

நெடியகரிய கூந்தலையுடைய பரத்தையரையும், சடைமுடி தரித்த முனிவரையும் இருபொருள் பட ஒரு தொடரிற்கூறித் தலைவனை மருளவைக்கிறாள் தலைவி.

## நகைச்சுவை நாடகம்

கலித்தொகை மருதத்தினுள் வரும் சுவைக்குரிய பகுதிகளில் இது சிறந்த ஒன்று. தன்னின் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத காதலன் காதலிகளைப் பற்றியே கேட்ட நமக்கு ஒரு கூனிக்கும் காதல் தோன்றுவதை மருதனிளநாகனார் சித்தரிக்கிறார். குட்டையன் கேள்விக்குக் கூனி பதிலிருப்பதாகவும் இக்காட்சியை அமைத்து நயந்தருகிறார் புலவர். முதலிற் குட்டையன் கூனியை வேண்டுகிறான். "உன்னை நான்மார்புறத் தழுவுவேன் ஆயின் நின்னுடைய கூன் என்னைத் தடுக்கும். முதுகுப் பக்கமாகத் தழுவுவேனாயின் உனது தொங்கும் கூன் என்னை, அமுக்கும், ஆகையால் முதுகுப்பக்கம் நெருங்கக் கூடமாட்டேன். பக்கத்திலே வேண்டுமானால் சிறிது தழுவலாம். கொஞ்சம் என்னருகே வந்தால் பக்கத்திலே தழுவிப் பார்க்கிறேன்.

"கொடுமடாய
நின்னையான்
புக்கு அகலம் புல்லின் நெஞ்சு
ஊன்றும் புறம்புல்லின்
ஆக்குளுத்துப் புல்லலும்
ஆற்றேன் அருள் ஈமோ
பக்கத்துப் புல்லல் சிறிது"

(கலித்தொகை : மருதம்)

(கொடுமடாய்-வளைந்தகூனியே, அகலம்-மார்பு, புல்லல்-தழுவுதல், ஈமோ-கொடு)

கூனனுக்குச் சரியான பதிற்கொடுக்கிறாள் கூனி "சீ போடா குறளா! கொப்பரையைக் காட்டிலும் குட்டையே! உழுந்தினைப் பார்த்தாலும் சிறிது உயரமென்று சொல்லலாம் நின்னை என்ன உயரமென்று சொல்லுவது? உழுந்தைக் காட்டிலும் குட்டையன் நீ; உன்னைக் காட்டிலும் கூனியாகிய நான் எவ்வளவோ

உயர்ந்தவள்தான். உன்னிலும் இழிந்ததில்லை எனது கூன்பிறவி. யான் நினைத்தால் என்னை எத்தனையோ பேர் பாதுகாப்பர். நீ என்னவோ பக்கத்திலே தழுவுவேன் என்று இகழ்கிறாய்!

"எம்மைப் புரப்போம்
என்பாரும் பலரால்
என்பக்கத்துப் புல்லீயா
யென்னுமால் தொக்க
உழுந்தினுந் துவ்வாக்
குறுவட்டா நின்னின்
இழிந்ததோ கூனின் பிறப்பு"

(கலித்தொகை: மருதம்)

(புரத்தல்-பாதுகாத்தல், புல்ஈயாய்-தழுவுதலைத்தருவாய், குறுவட்டு-சிறியகொப்பரை)

காதல் என்ற பேரில் நகைச்சுவைக்கு இலக்காக அமைகின்ற ஒரு காட்சியையும் வரைந்து காட்டுகின்றதை நோக்குங்கால் மருதன் இளநாகனார் வெறும் புலவர் மட்டுமல்ல; சுவை பயனுறுவாக மாறி அமைகின்ற பாலியல் நெறியையும் நுணுகி ஆராய்ந்துள்ளவர் என்பதையும் அறிகிறோம். செய்தியைப் பார்க்கப்போனால் மிகச் சர்வசாதாரணமானதே. அது கவிதையாய் வரும் போதுதான் அபூர்வம்.

## காதல் மருந்து

இங்ஙனம் தலைவியைக் கண்டு வருந்தி நின்ற தலைமகன் அவளுடைய தோழியைக் கண்டு தன்னுடைய குறையைக் கூறுகிறான். என்னுடைய காதல் நோய்க்குக் காதலே மருந்தாக அமைய முடியும். எனவே தலைவியைக் கண்டு தன்னுடைய குறையை எடுத்துக் கூறி அருள்செய்யும்படி வேண்டுவாயாக. யான் சிங்கத்தோடு போர்செய்யும் யானைபோல, மனமுடைந்து உருகுகிறேன். உன்னுடைய துணை இன்றேல் யான் அவளை அடைவது இயலாது என்று இவ்வாறு தன் காதல் நோய்க்கு மருந்து நாடிப் பலபல கூறி நிற்கின்றான்.

போக்குதற்கரிய இக்காதல் நோய் என் உயிரையே பற்றிவாட்டுகிறது. உயிர்கூடப் போய்விடும் போலும்! இந்த நோயைத் தீர்க்கும் மருந்தாக அமைவது அவள் காதலே! அவளே இந்த நோயைத் தீர்க்கமுடியும். ஒளி பொருந்திய வளைகளைத் தன் முன்கையிலே வரிசையாக அணிந்த அவள் மனம் இரங்காளாயின் யான் உயிர் வாழ முடியாது. உலகத்திலே மக்களுக்கு வரும் பலவகைப் பிணிகளுக்கும் மருந்துகளாக அமைவது வெவ்வேறு பொருள்களே. ஆனால் இந்தக் காதல் நோய் ஒன்றனுக்கு மட்டும் அதுவே மருந்து. வேறு மருந்து இல்லை. அவளது தண்ணிய மதிமுகத்தைக் காணுதல் கூடுமாயின் அதுவே இப்போது மருந்தாக அமைய முடியும். அந்த இனிய தண்ணிய மதிமுகத்தைக் கூட இப்போது காண முடியாதாயின் வீணாக யான் வேறு, நோயினைத் தீர்க்கும் மருந்தே இல்லாமல் இறக்க நேரிடும். அவள்தன் இன்முகமுங் காட்டாளாயின் யான் என்ன செய்வேன்? என்று அவ்விளைஞன் தோழியிடம் தன் குறையைத் கூறி அதைத் தணிக்கும்படி வேண்டுகிறான். இதில் காதல் மனோதத்துவமே பரந்து நின்று விளங்குகிறது.

"ஆரஞர் எவ்வம் உயிர் வாங்கும்
மற்றுஇந் நோய் தீரும் மருந்
தருள் வாய்
ஒண்தொடி நின்முகங்காணும்
மருந்தினேன்
என்னுமால் நின் முகத்தான் பெறின்
அல்லது கொன் னேமருந்து
பிறிது யாதும் இல்லேன் திருந்
திழாய்
என்செய்வாங் கொல்? இனி
நாம்"

(குறிஞ்சிக்கலி)

(ஆரஞர்-போக்கரிய துன்பம்-நோய், எவ்வம்-வாட்டத்தால், ஒன்தொடி-வளையலணிந்த பெண்ணே; என்னும் - என்று கூறும், ஆல்-ஆசை, கொன்னே-வீணாக, திருந்திழாய்-அணிகளை அணிந்தவளே)

பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
**"தன்நோய்க்குத் தானே மருந்து"**

என்று இந்தக் காதல் மனோபாவத்தைத் திருவள்ளுவரும் கண்டு கூறியுள்ளார்.

காதல் என்பது உள்ளமும் உயிரும் கொள்ளும் தெய்வீக தொடர்பு என்பதை இக்காட்சி விளக்குகிறது.

## தோழியின் உதவி

தலைமகன் தோழியிடம் வேண்டிக் கொண்டது வீண்போகவில்லை. தோழி தலைவியிடம் அவனது நோயை எடுத்துக் கூறிக் குறை தணிக்கும்படி வேண்டுகிறாள். "தலைவி" அதனை மறுக்க முடியாத வகையில் தன் சொற்களை நிறுத்துக் கூறுகிறாள் தோழி. "நீயும் அவனைக் கண்டு கண்டு தலையைக் குனிகிறாய், அவன் குறையை யான் உன்னிடம் சொல்லிக் கொண்டிருக்கும் போது நாணத்தால் தரையை நோக்கிக் கொண்டே கால் விரலால் மண்ணைக் கிளைக்கிறாய். எனவே உனக்கும் அவன்மேல் ஏதோ ஒரு பற்று உண்டு என்பதை நீ என்னிடம் மறைக்க முடியாது என்று தோழி கூறுவாளானால். பின் தலைமகள் அவள் வேண்டுகோளை எவ்வாறு மறுக்க முடியும்? தலைவனுக்குத் தோழி தான் உதவி செய்யும் முகமாகத் தலைவியிடம் கூறியவை.

"பூக்களை முடித்திருப்பதனால் பொலிவு பெற்ற கூந்தலையுடைய தலைவி! நான் நின்னை அழைத்து அழைத்துத் தலைவனுழைச் சென்று வருக, என்று அனுப்பியது போல நீ அவனிடத்துச் செல்வாயாக. அங்ஙனம் சென்று இவ்விடமே நினக்கு இருப்பிடமாகக் கருதி இருந்தாயோ என்று என்னைத் தேடி அங்கே சென்றவள்போலக் கூறி அவ்விடத்திலுள்ள குறிப்பிட்ட இடத்திற்கு நீ செல். செல்லுங்காற் றொய்யிற் குழம்பு கொணர்வாள் போலச் செல். அப்படி நீசெல்லும் பொழுது அவன்நோய். தீர்க்கும் மருந்து நீயே ஆகையால் அவன் நினது காலில் வீழ்ந்து நின்னை வேண்டுவான். ஆராய்ந்து பார்க்கும்போது நான் இதனைக் கூறும்போதே நீயும் நாணத்தால் தலை குனிந்து நிலத்தைக் கீறுகிறாய்! இங்ஙனம் என் முன்னால்

நடிக்கும் இந்தப் போலி நாண நாடகத்தை அவன் முன்னே சென்று நடிப்பது ஒரு 'அரிய செயலா? என்று தோழி தலைவனுக்கு உதவியாக வேண்டுகிறாள்.

"பூக்குழாய் செல்வம்
அவனுழைக் கூஉய்க்கூய்
விரும்பியான் விட்டேனும்
போல்வல் என்றோன்மேல்
கரும் பெழுது தொய்யிற்குச்
செவ்வில் ஈங்காக
இருந்தாயே
எங்றாங்கு இற
அவன்நின் திருந்தடி
மேல் வீழ்ந்து இரக்கும்
நோய்தீர்க்கும் மருந்து
நீயாகுதலான்
நின்னொரு...சூழங்கால்
நீயும் நிலங்கிளையா
வென்னோடு நிற்றல்
எளிதன்றோ மற்றவன்
தன்னோடு நின்று விடு"

(செல்லல்-செவ்வாயாக, அவனுழை-அவனிடத்து, கூஉய்க்கூய்-அழைத்தழைத்து, தொய்யில்-தோள்மேல் எழுதுவது, இற-போ, சூழங்கால்-ஆராயுங்கால், கிளையா-கிளைத்து, என்னோடு-தோழியொடு)

(செய்யுள் தோழி கூற்று)

இதனுள் தோழி மிகச் சாமர்த்தியமான முறையில் தலைவனுக்கு உதவிசெய்கிறாள் என்பது அவள் பேச்சிலிருந்தே வெளிப்படுகிறது.

## தலைவியின் தியாகம்

தோழியின் உதவியால் தலைவன் தலைவியை எளிதில் எய்திவிடுகிறான். இப்போதெல்லாம் அவனுக்கும் அவளுக்கும்

தோழியின் உதவியே தேவையில்லை. அவர்களுக்குள் காதல் அவ்வளவு முறுகி வளம் பெற்றுவிட்டது. அவனுக்காக அவள் உயிரைத் கூடத் தியாகம் செய்யத் தயாராயிருந்தாள். அவளுக்காக அவனும் உயிரைத் தியாகம் செய்யத் தயாராயிருந்தான். இப்படி இருக்குங்கால் அவன் பிரிய நேரிடுகிறது. அவனது பிரிவு அவளை மிகவும் வாட்டுகிறது. ஆனால் அவள் அதைப் பிறரிடம் கூறவில்லை. பிறரிடம் தன் பிரிவுத் துன்பத்தைக் கூறின், தலைவனுக்கு அதனாற்பழி ஏற்படக் கூடும் என்ற எண்ணமே அவளைத் தன் துன்பத்தை மறைக்கச் செய்யும் தியாகத்தைச் செய்யச் சொல்கிறது.

இங்ஙனம் தலைவி செய்த தியாகங்களை எல்லாம் தலைவன் திரும்பி வந்தபோது தோழி அவனிடங் கூறி இப்படிப்பட்ட தலைவியை நீவெகு விரைவில் மணந்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துகிறாள். தோழி வாயிலாக வெளிப்படும் தலைவியின் தியாகச் செயல்களைப் பாருங்கள். "என்னுடைய தோழியாகிய தலைவி நீ பிரிந்த காலத்துத் தனக் கேற்பட்ட துன்பத்தினால் நீ செய்த அருளின்மையை என்னிடமும் கூறாது மறைத்து வைத்தாள். அவள் அங்ஙனம் மறைத்து வைத்தது. அக்கருணை யின்மையை யான் கேட்டுப் பிறரிடம் சொல்லவும் கூடும் என்று அஞ்சியே ஆகும். யான் நின்னைப் பிறர்முன் பழித்தலுக்கு அவள் நாணுகிறாள். என்னிடம் மட்டுமல்ல ஆயத்திலுள்ள ஒருவரும் அறியாதபடி மறைத்து வைத்தாள். ஏனெனில் ஆயத்தார், "நீ வன்கண்மையுடையை" என்று கூறுதலைக் கேட்டதற்கு நாணியே ஆகும். ஊரிலுள்ளார்க்கும் மறைத்தாள். இவைகள் தலைவியின் தியாகப்பண்பைக் குறிக்கின்றன. நின்பழியை மற்றவர் அறிதலையும் அவள்தான் நாணத் தக்கதாகக் கருதினாள் என்றால் அது தலைவி உன்பாற்கொண்ட நேயத்தால் எழுந்த தியாக வுணர்வேயாகும்". என்று தோழி தலைவனிடம் திருமணத்தை வற்புறுத்தும் போது கூறினாள். இக் காட்சியுள், தனக்குத் துன்பமெய்தும், காதல் காரணமாகத் தலைவனுக்காகத் தன் இன்பத்தைத் தியாகம் செய்யும் தலைவியைக் காண்கிறோம்.

## சுழலும் மத்து

*முல்லைக்கலி*

*ஆயர்பாடியிற் பிறந்த இளங் கன்னி ஒருத்திக்கும் ஓரிளைஞனுக்கும் காதல் உண்டு. அக்கன்னியை நோக்கி அவ்விளைஞன் ஒரு முறை தன் மன நிலையைக் கூறுகிறான். தன் மன நிலைக்கு அவன் கூறுகின்ற உவமை காலத்திற்கும் இடத்திற்கும் குடிக்கும் பொருத்தமாக அமைகிறது. ஒரு முறை அவ்விளைஞன் விருப்பத்தைப் புறக்கணித்ததோடல்லாமல் அவனை இழித்தும் கூறிவிட்டாள் அவள். பொறாது நெஞ்சு வெதும்பிய இளைஞன் பேசுகின்றான் :*

*"மெல்லிய இயல்பினையுடைய ஆயர் சாதியிற் பிறந்த பெண்ணே! தயிர் கடையும்போது சுழன்று சுழன்று கடையும் மத்தைச் சுற்றிய கயிற்றினைப் போல் என்னுடைய நெஞ்சு நின்னுடைய அழகைச் சூழ்ந்து கொண்டு சுழன்று திரிகிறது. நீ கூறிய கொடுஞ்சொற்களாலே என் நெஞ்சு அஞ்சுகிறது. அவ்வச்சத்தினாலே நின்னிடத்திலிருந்து மீண்டு தன் நிலை எய்தமுடியாது அளப்பரிய துன்பத்தைத் திரும்பவும் பெற்று என்னிடத்திலிருந்து சென்று சென்று தடுமாறி வருகிறது. முதல் முதலாக ஈன்ற பசுவானது வீட்டிலிருந்து மிக்க தொலைவில் ஒருதொழுவினுள் கட்டி வைத்த, தன் பசுங்கன்றை நினைத்துப் புல்மேயவும் போகாது. சுற்றிச்சுற்றித் திரியும்.அத்தாய்ப் பசுவைப் போல நின்னைக் கண்டு என் நெஞ்சு நாள்தோறும் நடுநடுங்கி அல்லலுறுகிறது.*

**"அச்சாத்தால் மாறி**
**அசைவினாற் போதந்து**
**நிச்சந் தடுமாறும்**
**மெல்லியல் ஆய்மகள்**
**மத்தம் பிணித்த**
**கயிறுபோல் நின்நலம்**
**சுற்றிச்சுழலும்**
**என் நெஞ்சு**
**விடிந்த பொழுதினும்**

இல்வயிற் போகாது
கொடுந் தொழுவின் உட்பட்ட
கன்றிற் குச் சுழுங்
கடுஞ்சூலாம் நாகுபோல்
நிற்கண்டுநாளும்
நடுங்கஞர் உற்றதென் நெஞ்சு
(கலித்தொகை : முல்லை)

(அசைவு-துன்பம், போதந்து-சென்று, நிச்சயம்-நாள்தோறும், மத்தம்-தயிர்கடையும் மத்து, பிணித்த-கட்டிய, இல்வயின்-வீட்டிற்கு, கொடுந்தொழு-வளைந்ததொழு, கடுஞ்சூல்-துன்பநிறைந்த முதற்கரு, நாகு-இளம்பசு, அஞர் - துன்பமிகுதி)

உளநிலையை வெளிப்படுத்த அமைகின்ற வாய்ப்புக்களுள் ஏமாற்றம் தலைசிறந்தது. ஏமாற்றத்தில் ஒருவன் பேசும் சொற்கள் உண்மையாக அவனுடைய உள்ளத்திலிருந்து வெடித்து வெடித்துச் தெறித்துவரும். அந்தச் சொற்களில் ஏதோ மறைவான ஆற்றல் தோற்றும். சுழலும் மத்தில் அங்கும் இங்கும் இழுபடும் கயிறு போலவும், முதற் கருவுற்ற பசுவின் கன்றுகாக்கும் நீங்காப் பேரவாப் போலவும் அவனது நெஞ்சு அவளைப் பற்றிச் சுழலுகிறது. அவள் மறுக்கும்போது அவளுடைய சொற்களில் ஏமாற்றம் உருப்பெறுகிறது.

## காதல் தேர்வு

கட்டுக்குலையாத உடலமைப்புப் பெற்ற காளை அவன். பொன்னை உருக்கி உறுப்புக்களை வார்த்தாற் போன்ற சின்னஞ்சிறு கன்னிப் பருவத்துக் குமரி அவள். அவன் அவளை விரும்பினான். அழியாக் காதல் கொண்டான். அவளுக்கும் அவன்மேற் காதல் உண்டு. ஆனால் பெண்மைக்கேயுரிய அச்சம் அதனை வெளித் தெரியாதவாறு மறைத்து விடுகின்றது.அவன் அவள் பெற்றோர்களை அணுகுகிறான்.செய்தியைக் கூறுகிறான். அவர்கள் அவனுடைய காதலுக்கு ஒரு தேர்வு நடத்துவோம் என்கிறார்கள். அந்தத் தேர்வில் அவன் மட்டுமில்லை அவனை ஒத்த இளைஞர்கள் யாவரும் கலந்துகொள்ளலாம் என்றும்

கூறுகின்றனர். அதுதான் "ஏறு தழுவுதல்" என்னும் தேர்வு. கொம்புசீவி விடப்பட்டுக் கொழுகொழுவென்று வளர்ந்திருக்கும் இளங்காளை ஒன்றை விரட்டிவிட்டு அதைப் பின் தொடர்ந்து பிடிக்கச் செய்தலே "ஏறுதழுவுதல்" என்பது.

எவனொருவன் தழுவுகிறானோ அவன் துணிவைப் பாராட்டி அவனுக்கு அக்கன்னியைப் ,பெருவிருப்புடன் திருமணம் செய்துகொடுப்பர் பெற்றோர். தலைவனுக்காகத் தலைவனுடைய நண்பன் இந்தத் தேர்வைப்பற்றி அறிந்துவந்து கூறுகிறான். "இவள் ஒப்பற்ற புகழினையுடைய நல்ல காளையைத் தழுவுவாரவற்கே. அழகான மாந்தளிர் போன்ற மேனியைக் கொடுப்பர்.இவளுடைய பருவத்திலேயே செய்யப்பட்ட முடிவு இது. என்று கூறினான் நண்பன். அதுகேட்ட தலைவன், அச்சுற்றத்தைநோக்கி, "யான் காளையைத் தழுவி அவளைக் கொள்வேன் என்று அவள் பெற்றோருக்குச் சொல்லுவாயாக என்றான் நண்பன்.

"ஓ ஒ இவள் பொருபுகழ்
 நல்லேறு கொள்பவரல்லாற்
திருமா மெய் தீண்டலர்
 என்று கருமமா
எல்லாருங் கேட்ப
 அறைந்தறைந் தெப்பொழுதுஞ்
சொல்லால் தரப்பட்டவள்"
 பெண்ணின் தாய் தலைவன் -
"சொல்லுக, பாணியே
 மென்றோர் அறைகென்றார்
பாரித்தார் மாணிழை
 யாறாகச் சாறு"

(கலித்தொகை : முல்லை)

(ஏறு காளை; கருமம்-செயல், அறைந்து-பறைசாற்றி, பாணியேம் - காலந் தாழ்க்கமாட்டோம், சாறு -ஏறுவிடுவிழா, பாரித்தார் - பலபல பேசுமிளைஞர்)

இதனுள் வீரத்தை அறிந்து மகளைக் கொடுக்க வேண்டுமென்ற பெற்றோரது சீரிய நோக்கமும், வீரத்தை காண

வெளிப்படுத்தியாவது காதலை நிறைவேற்றிக்கொள்ள வேண்டுமென்ற இளைஞனின் உள்ளத்தையும், அப்படியாயின் அவ்விளைஞருக் கெல்லாம் எம் மகளைப் பெறும் வாய்ப்பான ஏறுதழுவு விழாவாகிய காதல் தேர்வு விரைவில் நடக்கும் என்று அறிவிக்கும் பெற்றோர் திறமும் காட்சிகளாக விரிகின்றன.

## மோர் விற்கும் மெல்லியல்

தெருவில் கைகளை அழகாக வீசிக்கொண்டு தலையில் சுமந்த மோர் பானையோடு நாள்தோறும் மோர் விற்க வருவாள் ஒரு குமரிப் பெண். காதல், இடம் பொருள் தகுதியைப் பார்த்தா தோன்றுகிறது? அதற்கு அழகும் இளமையும் பருவமுந்தானே குறி, ஒரு இளைஞனுக்கு அந்த மோர் விற்கும் மெல்லியலின் மேல் அளவு கடந்த காதல் ஏற்பட்டுவிடுகிறது. காதல் வேகத்தில் அவளைஅவன் கண்டவாறு வருணிக்கத் தொடங்கி விடுகிறான். இப்பொழுது அவளைச் சற்று இங்கே அழைத்துப் பேசச் சொல்லிக் கேட்போம். "இளமை கொழு கொழுத்து வளர்ந்த மேனியுடன் இறுமாந்து தலையில் மோர்ப்பானையுடனே தனது பேரழகால் -துடிதுடிக்கும் இளமையால், வனப்பு முழுதும் பற்றி வளர்ந்தவளரிங் கொடியாய்ப் பேரூர்களின் தெருவிலும் சிற்றூர்களிலும் தன்னைத் கண்டவுடன் ஊர் இளைஞர் குழாத்துள்ளே ஆரவாரத்தை உண்டாக்குபவளைப் போல மோரோடு வந்த மெல்லியலின் பாரப் பேரழகை என் நெஞ்சே நீ காண்பாயாக. இம்மோர் விற்கும் மெல்லியலின் வனப்புக்கு ஈடு சொல்ல உலகத்து மகளிரெல்லாம் ஒப்பே இல்லாதவர்கள். இவள் வனப்பிற்கு இவளே ஒப்பு. இவளுடைய மோர்ச்சுமை அழகிற்குப் பொருந்தியதில்லை. இவள் மோர்சுமந்து தன்தோளை வீசி கூந்தலிலுள்ள வட்டிலை ஒருகையால் தழுவிக் காதில் தொங்கும் குண்டலங்கள் ஊசலாட வருகின்ற தன்மையை உடையவள்.

"மதை இனள் பேருருஞ்
சிற்றூருங் கௌவை
எடுப்பவள்போல்
மோரோடு வந்தாள்
தகைகண்டை

யாரோடும்
சொல்லியாள் அன்றே
வனப்பு"
திருந்தாச் சுமட்டினள்
ஏனைத் தோள்வீசி
வரிக்குழை வட்டி
வழீ இ அரிக்குழை
ஆடல் தகையள்"

(கலித்தொகை : முல்லை)

(மதை இனள் - இளமைச் செருக்கினள், கௌவை -ஆரவாரம், கண்டை-பார்த்தாய், சொல்லியாள் சொல்லத்தகுந்தவள், வனப்பு - அழகின்ஈட்டம், சுமட்டு-சுமை, வரிக்குழைவட்டி - வட்டில், குழை-காதணி, தகையள் - தன்மையள்)

இளம் ஆணுள்ளம் பெண்மையின்பால் ஈடுபட்டு ஊறுகின்ற போது எய்துகின்ற மனோபோதையை உணர்ச்சி மிகுதியை இவ்வாசிரியர் சுவைபட எடுத்துக்காட்டுகிறார். அதனோடு அவ்விளைஞனையே தான் கண்டு கவரப்பட்ட மோர்விற்கும் மெல்லியலின் வனப்பை ஒரு காட்சியாகச் சொல்லால் வரைந்து காட்டும்படிசெய்கிறார். தெருவில் கைவீசி நடக்கும் மோர் சுமந்த கன்னிப் பெண் நம் கண் முன்னால் உருவாக்கப்படுகிறாள் அவனுடைய வருணைனைச் சொற்களால்.

## வெற்றிச் செருக்கு

வெற்றியென்பதைப் பொறுத்தவரையில் - அது எந்தத் துறையிலாயினும் சரி, செருக்கைத்தான் செய்கிறது. வெற்றியின் சுவையே செருக்குருவத்தில்தான் வெளிப்படுகிறது. நன்றாக ஆராய்ந்து சொல்லப் போனால் வெற்றிக்குரிய மெய்ப்பாடுகளே செருக்கு.இறுமாப்பு, ஏக்கழுத்தம், பீடு, இவைகள்தாம். காதல்துறை மட்டும் அதற்கு விதிவிலக்கா என்ன? இல்லைதானே. ஒரு பெண்ணை மணம்புரிய விரும்பும் இளைஞர்களுக்கெல்லாம் அப்பெண்ணின் தந்தை "ஏறுதழுவுதல்" என்ற ஒரு தேர்வை வைக்கிறார். தம் மகளுக்குத் தக்க கட்டும் பொலிவும்

மெய்த்துணிவும் உள்ள ஒரு ஆடவனை அம்முறையிலேதான் தேர்ந்தெடுக்க முடியும், என்று அவர் கருதுகிறார். தேர்வு வைக்கிறார். நான் முன்பு நீ முன்பு என்று அவள் எழிலைக் கண்டு கண்டு நெஞ்சம் பறி கொடுத்திருந்த சிற்றிளைஞர்கள் குவிந்தனர்.

கொழுகொழுவென்று வளர்ந்த திமிலும் குத்தி வயிற்றைக் கிழிக்கும்படி சீவிய கொம்புமாக ஓடிவருகிறது காளை. உயிரை ஒரு பொருட்டாக மதியாது பாய்ந்து பற்ற முயல்கின்றனர் இளைஞர். மனம் பேதலித்துத் திரும்புவார் சிலர். முட்டுப்பட்டு இரத்த வெள்ளத்தில் மிதப்பார் சிலர். இறுதியில் தகுதியுள்ள ஓரிளைஞன் காளையை அடக்கிப் பிடித்தான். வெற்றி கிடைத்தது. குறிப்பிட்ட தேர்வு நிகழ்ந்த இடத்திற்கு அந்தப்பெண்ணும் வந்திருந்தாள். வென்ற இளைஞன் வெற்றிச் செருக்கால் அவளை அப்படியே விழுங்கித் தீர்த்து விடுபவன் போல நோக்கினான்.

அது கண்ட அந்தபெண் அவனது செருக்கை இகழ்ந்து தன் தோழியிடம் கூறுகின்றாள் :- தொழிலில் திறம் வல்லதோழீ இந்தஆயர்மகன், நமது சுற்றத்தோடே நாம் குரவைக் கூத்தாடும்போது நம்மை இல்லையாகச் செய்திடுவான் போல நோக்கி நமக்கு வருத்தத்தைத் தரும் நோயைச் செய்தல், செந்நிறம் பொருந்திய கண்களையுடைய காளையைக்கொண்டு அடக்கினேன் என்னும் வெற்றிச் செருக்கினாலன்றோ? வேறொன்றினாலுமில்லை.

"தொழிலீ இஇ ஒருக்குநாம்
ஆடுங் குரவையுள்
நம்மை அருக்கினான்
போல் நோக்கி அல்லல் நோய்
செய்தல் குருக்கண்
கொலையேறு கொண்டேன்
யான் என்னுந் திருக்கன்றோ
ஆயர்மகன்"

(கலித்தொகை : முல்லை)

(தொழிலீ - தொழில் வல்ல தோழீ, ஒருக்கு-ஒருங்கே, குரவை-கைகோத்தாடுங் கூத்து, குறு-நிறம், ஏது-காளை)

இதனுள் காதலில் வெற்றி பெற்ற இளைஞனுடைய வெற்றிச் செருக்கையும் தலைவியின் அதுபற்றிய இகழ்ச்சியையும் சோழன் நல்லுருத்திரன் சித்திரம் போல வரைந்து காட்டுகிறான்.

## மருந்தில்லா நோய்

ஒரு முறை ஒரு இளைஞன் தன் கையாற் றொடுத்துக் கொடுத்த மாலையொன்றை விரும்பிப் பெற்று அணிந்து கொண்டாள் அவள். ஆனால் இன்று அதுவே அவளுக்கு ஒரு சிறு பழியை ஏற்படுத்த ஆரம்பித்தது. அக்கம் பக்கத்தார், சுற்றத்தார், தோழி முதலாயினார், அது எங்கே கிடைத்த மாலை? என்று கேட்கத் தொடங்கினார்கள், அவள் சரியாகவே விடை தரவில்லை. அவர்கள் சந்தேகப்பட்டார்கள். தங்களுக்குள் ஏதோதோ மெல்ல மெல்லப் பேசினார்கள்.

அவள்தன் தோழியைக் கேட்டாள். இந்த வம்பை தவிர்ப்பது எப்படி? என்று. அப்பெண்ஆயர்குடியினள். தோழி ஒரு வழி சொன்னாள். "அவனும் ஒரு ஆயர் குடியிற் பிறந்தவனாக இருந்து நீயும் ஆயர் குடிமகளாயிருந்து, இருவரும் மெய்யாக விரும்பி யிருப்பீர்களாயின், உன் தாய் உன்னை வருத்தமாட்டாள், உங்கள் காதலுக்குக் கட்டாயம் வரவேற்புக் கிடைக்கும் என்றாள். தலைவிக்குத் தாய் அப்படி ஒருப்படுவாள் என்ற நம்பிக்கை இல்லை. "நினக்கு வைத்த நெஞ்சத்தைக் கடவுள் என் தாய்க்கு மாற்றி வைத்திருப்பானாயின் ஒருவேளை அவள் ஒப்புக்கொள்ளலாம்" என்றாள். "இன்னும் நீ உன் தாயை அப்படியா கருதுகிறாய்?" என்றார்கள் தோழி. நீ உன்னை இழந்த காதல் மிகுதியினால் ஆயர் மகனை விரும்புதலோடு தாய்க்கும் அஞ்சுவாயாயின் நின் காதல்நோய்க்கு மருந்தில்லை. இரண்டிலொன்று துணிந்தாலொழிய நின்நோய் "மருந்தில்லா நோயே" என்றும் சொன்னாள் தோழி.

**"ஆயர் மகனாயின்**
**ஆயமகள் நீயாயின்**
**நின் வெய்யன் ஆயின்**

அவன் வெய்யை
நீயாயின் அன்னை நோதக் கதே
இல்லையின்
நின்நெஞ்சம் என்னை நெஞ்சாகப்
பெறின் அன்னையோ?
ஆயர் மகனையு காதலை
கைம்மிக
ஞாயையுங் மஞ்சுதி ஆயின்
அரிதரோ
நீயுற்ற நோய்க்கு மருந்து"

(கலித்தொகை : முல்லை)

(வெய்யன்-விரும்புபவன், வெய்யை-விரும்புவாய், நோதக்கது வருந்தத்தக்கது, என்ன - என்தாய்; அன்னையோ-அத் தன்மையையோ? காதலை-காதல் உடையை, ஞாய்-தாய், அஞ்சுதி-அஞ்சுகின்றாய்)

இக்காட்சியுள் அறியாத இளமை அவன் கொடுத்த மலர் மாலையைச் சூடிக்கொள்வதையும், அதுவே காதலாக மாறுவதையும் காதலுக்குத் தாய் நெஞ்சம் ஒப்புமோ என்ற அச்சத்தையும் தோழியின் ஆறுதலையும் காண்கிறோம். காதல் நோய்க்குக் காதல்தான் மருந்து. காதல் வெற்றி பெறமுடிவில்லை என்றால் அக்காதல் நோயும் "மருந்தில்லா நோய்" ஆகவே அமைந்துவிட்டது.

## களவு வெளிப்பட்டது

அந்த இளங்குமரிப்பெண், தன் இனத்தைச் சேர்ந்த ஆட்டிடையன் ஒருவன் கொடுத்த முல்லை மாலையைச் சூட்டிக்கொண்டு வீட்டிற்கு வருகிறாள். வீட்டில் தாய் தந்தையருக்கு நடுவில் இருக்கும் போது அந்த மாலை தலையிலிருந்து அவிழ்ந்து கீழே விழந்துவிடுகிறது, தாய் தந்தையர் தீயை மிதத்தாற் போலத் திடுக்கிட்டு அவளைப் பார்க்கின்றனர். அவளுடைய களவு வெளிப்பட்டு விடுகிறது. இதைக் கண்ட பின்னும் தாய் என்ன? ஏது? என்று கேட்கவில்லை. மனதினுள் திடுக்கிட்டு நின்றாள். இதே நிகழ்ச்சியை அந்தப் பெண் தன்

தோழியிடம் கூறுமுகமாகக் கலித்தொகை முல்லைக் காட்சியுள் காண்கின்றோம்.

"மெல்லிய இயல்பினையுடை தோழீ! நான் அன்று ஆடுமேய்க்கும் ஆயர்மகன் சூடிவந்த ஒரு முல்லைச் சரத்தையும் மாலையையும் வாங்கிக் கூந்தலிலே முடிந்து கொண்டேன். பின்பு யான் வீடு சென்றபோது செவிலித்தாய் எனக்கு எண்ணெய் தேய்த்துத் தலைசீவ என் தலையை அவிழ்த்தாள். தாய் தந்தை முதலியோரும் அப்போது வீட்டிலேயே இருந்தனர். அவிழ்த்த தலைவிருந்த தாயும் கண்டு வெகுளி எய்தும்படியாக அப் பூங்கண்ணி செவிலிமுன்னே வீழ்ந்தது. தோழீ, இது எப்படி இருக்கிறது என்றால் பிறர் காணாமல் திருட்டுத்தனமாக உண்ட கள்ளானது சிறிது நேரத்தில் பலரும் அறியும்படி போதையைத் தருதல் போல இருக்கிறது.

கள்ளுண்டவன், அப்போது கண்டிப்பாகத் தனது களவை ஒப்புக்கொண்டு தானே ஆகவேண்டும். அப்படி ஒப்புக்கொண்டாற்போல நமது களவொழுக்கம் கையோடு பிடிபட்டது வெளிப்பட்ட பின்னரும் தாய் அதனை இது எப்படி வந்தது? என்று கேட்கவில்லை , கோபம் கொள்ளாது நெருப்பைத் தீண்டினவர்களைப் போல கையை விதிர்விதிர்த்து வெளியேபோய் விட்டாள். தாய் போனபின் யானும். எனது மயிர்ச் சாந்து பூசி உலர்த்தின கூந்தலை முடித்து, நிலத்திலேயே தோயும் பூக்கள் வரைந்த கரையையுடைய என்நீலச் சிற்றாடையை சிறிது தூக்கிக் கொண்டு பக்கத்திலுள்ள தோட்டத்துப் பக்கம் சென்று விட்டேன்.

"தோழிநாங் காணாமை யுண்ட
கடுங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க
வுரைத்தாங்குக்
கரந்தது உங் கையோடு
கோட்பட்டாங் கண்டாய் நம்
புல்லினத் தாய்மகன்
சூடி வந்ததோர்
முல்லை ஒரு காழுங்
கண்ணியு மெல்லியால்

கூந்தலுட் பெய்து முடித்
  தேன்மன் தோழியாய்
வெள்நெய் உரைஇ
  விரித்த கதுப்போடே
அன்னையும் அத்தனும்
  இல்லராய் ஆய்நாண
அன்னை முன் வீழ்ந்தன்று
  அப் பூ
அதனை வினவலுஞ் செய்யாள்
  சினவலுஞ் செய்யாள்
நெருப்புக் கை தொட்டவர்
  போல விதிர்த்திட்டு
நீங்கிப் புறங்கடைப்
  போயினாள் யானும் என்
சாந்துளர் கூழை முடியா
  நிலந்தாழ்ந்த
பூங்கரை நீலந்தழீ இத்
  தளர்பு ஒல்கிப்
பாங்கருங் கானத்து
  ஒளித்தேன்

(கலித்தொகை : முல்லை)

(கரந்தது - மறைத்தது, கோட்படுதல்-பிடிபடுதல், புல்லினம்-ஆடு, காழ்-மலர் ஆரம், கண்ணிமாலை, மெல்லியால் - மெல்லிய இயல்பினாய், வெள்நெய்-கூந்தலுக்குப் பூசும்தைலம், உரைஇ-தடவி, கதுப்பு-கூந்தல், அத்தன்-தந்தை, இல்லர்-வீட்டின்கண்உள்ளார். ஆய்-தாய், வீழ்ந்தன்று-வீழ்ந்தது, கூழை-விரித்த கூந்தல், முடியா-முடித்து, பூங்கரை-பூவரைந்த கரைகளையுடைய, நீலம்-நீலச்சிற்றாடை, தளர்பொல்கி - தளர்ந்து ஒடுங்கி)

குற்றமுள்ள நெஞ்சின் மெய்ப்பாட்டை அருமையாக வரைந்து காட்டுகிறது. இந்த எழில்நிறைந்த முல்லைத் திணைக்காட்சி.

## நெய்தற் கலி

ஐந்தாவதாகிய நெய்தற்கலி நல்லந்துவனார் என்னும் புலவர் பெருந்தகையாற் பாடப்பெற்றது. தலைவி மாலைக்காலத்தில் ஏங்கி இரங்குதலைப் பற்றிப் பாடுவது. இத்திணைக்குரிய பொருள். சோகானுபவத்தைக் கூற்றுக்களாக வெளியிடும் நெய்தற்கலிப் பாடல்கள் சுவைக்கு இலக்கியமாக அமையும் சிறப்பு வாய்ந்தன. மாலைக்காலத்தின் சூழ்நிலைகளையும் தலைவியின் மனத்துன்பத்தையும் புலவர் புனைந்துரைக்கும் போது காட்சிகள் தத்ரூபமாக அமைய முடிகின்றது.

### உயிர் கொல்லும் பொழுது

"மாலைப்பொழுது வந்தது. கணவனோடு கூடிப் படுக்கைக்கு சென்றபின் துயில் பெற்ற மகளிர் கண்போலத் திரண்ட தண்டுகளையுடைய தாமரைமலர் கூம்பியது. தம்முடையபுகழைப் பிறர் கூறக் கேட்டு நாணித் தலைகுனியும் அறிஞர்களைப் போல மரங்கள் தலைசாய்ந்தன. சின்னஞ் சிறுகன்னிப்பெண் வாய்திறந்து சிரிப்பதுபோல் மல்லிகை முல்லைமுதலிய அரும்புகள் முறுக்க விழ்ந்தன. புல்லாங்குழலிலிருந்து வெளிவரும் கீத வெள்ளம்போல வண்டுகள் ஆரவாரம் செய்தன. இரைதேடச் சென்றிருந்த பறவைகளெல்லாம் குஞ்சுகளை நினைத்துத் திரும்ப தொடங்கின. பசுக்கள் தத்தம் கன்றுகளைக் காணும் நோக்கத்தோடு கொட்டங்களுக்கு வந்தன. காட்டுவிலங்குளெல்லாம் இருப்பிடங்களுக்குச் சென்று நுடங்கின. அந்தணாளர்கள் தாங்கள் செய்தற்குரிய மாலைக் கடன்களைச் செய்தனர். பெண்கள் சிவந்த சுடர்நாக்குகளால் ஒளிபரப்பும் விளக்குகளை ஏற்றினர். இப்படிப்பட்ட மாலைப்போது பெண்களின் உடலிற் பொதித்த உயிரைக் கொல்லும் பொழுது என்பதை அறியாது இதற்கு மாலைக் காலம் என்று பெயரிட்டிருக்கிறார்கள். உயிர் கொல்லும் பொழுதிற்கா மாலையென்று பெயர்? அப்படிப் பெயர் வைத்தவர்கள் அறிவுமயங்கிப் பெயர் வைத்துவிட்டார்களோ: தலைவனின்றித் தனியே இரங்குகின்ற தலைவியின் மனம் அவல மிகுதியினால் மாலையை உயிர்கொல்லும் பொழுதாக ஓதுகிறது.

"கண்பாயல் பெற்ற போல்
    கணைக்கால் அலர் கூம்பத்
தம் புகழ் கேட்டார் போல்
    தலைசாய்த்து மரந்துஞ்ச
முறுவல்கொள் பாவைபோல
    முகையவிழ்பு புதல் நந்தச்
சிறு வெதிர்ங் குழல்போலச்
    சுரும்பிமிர்ந்து இம்மெனப்
பறவைதம் பார்ப்புள்ளக்
    கறவைதம் பதிவயிற்
கன்றமர் விருப்பொடு
    மன்று நிறை புகுதர
மாவதி சேர
    மாலை வாள்கொளா
அந்தி அந்தணர்
    எதிர்கொள அயர்ந்து
செந்தீச் செவ்வ ழல்
    தொடங்க வந்ததை
வாலிழை மகளிர்
    உயிர் பொதி அவிழ்க்கும்
காலை ஆவது அறியார்
    மாலை என்மனார்
மயங்கியோரே"

(கலித்தொகை ; நெய்தல்-2)

(பாயல்-படுக்கை, கணைக்கால்-திரண்டுள்ள தண்டு, பாவை-பெண், முகை-அரும்பு,வெதிர்ங்குழல்-வேய்ங்குழல், இமிர்தல்-ஆரவாரித்தல், பார்ப்பு-குஞ்சுகள், கறவை-பசுக்கள், அமர்விருப்பு - நோக்கும் அவா, மா-விலங்குகள், வதி-வசிக்குமிடம், வாலிழை-தூய அணிகள், பொதி-உடல், என் மனார்-என்று கூறுவர்)

தலைவி கூறுகின்ற இந்தக் கூற்றுள் சூழ்நிலை வருணனை கவிதையில் (Discription of Atmosphere) அமைய வேண்டிய முறை மாறுபடாமல் அமைந்துள்ளது. மாலைக் காலத்தைப்

படிப்பவர் மனக்கண் முன்னே வரைந்துகாட்டும் காட்சிச் சித்திரமாக விளங்குகிறது. நல்லந்துவனார் பாட்டு, மரங்கள் தலைசாய்ப்பதற்கு அவர் கூறும் உவமை சிந்திக்க வைக்கும் உவமை. எல்லாவற்றிக்கும் மேலாகத் தலைவியின் சோக உணர்ச்சியை விலகாத முறையிற் பதிவு செய்திருக்கிறது பாட்டு)

## பகை அழிந்தது

மாலைக்காலம் அவளுக்கு மட்டுமல்ல அவரைப் பிரிந்த எல்லாம் அவளுக்கும் பகைதான். அந்திப் பிறையும் அகல் வானத்துச் செக்கரும் சுந்தரத்தென்றலும் சுகந்த மணமும்கூடிய மாலைப் பொழுதினிலே பக்கத்தில் அமர்ந்து பலபல பேசி அன்புக்கதை சொல்லி இன்பப் பெருக்காற்றும் தலைவன் இல்லையென்றால் அப்பொழுது ஏன் அவர்களுக்கு உயிர்கொல்லும் பகைப்பொழுதாக இராது? ஒரு தலைவிக்கு நல்ல வாய்ப்புக் கிடைத்தது. தலைவர் விரைவாக வந்து சேர்ந்தார். மாலைக் காலமாகிய பகை அவர் வந்த அப்போதே அழிந்தது. சோகசாகரத்திற்கு அப்பாற் போகக் கரை காணும் போது, சோகத்தின் முடிவுரையும் போகத்தின் முன்னுரையும் சொல்லில் இழைந்து ஒலிக்கவேண்டுமல்லவா?

உண்மையாகவே அவள் வாக்கில் அது அப்படி ஒலிக்கத்தான் செய்கிறது. "தப்புவதற்கு இடமின்றித் துன்பங்கள் செய்யும் மாலைக்காலத்தின் வருத்தம் மிக்க துயர் தீரும்படியாகக் காதலர் வேகமாக வந்து சேர்ந்ததனால் இளையபருவத்து அரசனை வாட்டுகின்ற கொடுமைமிக்குள்ள பகையானது நாட்டைக் காத்திடும் ஆற்றல் வாய்ந்த நல்லரசன் தோன்றியவுடன் அழிவதுபோல இம் மாலைக்காலமும் இருளிலே புகுந்து ஒளிந்து இல்லையாகப் போகின்றது. என்பது தலைவியின் கூற்று. தலைவிக்குப் பகையாகிய மாலைப்போது தலைவன் வந்ததனால் ஒளிந்து மறைந்ததற்கு இளைய அரசன் மேலே வருகின்ற கடும்பகை காக்கும் ஆற்றல் வாய்ந்த அரசன் நீக்கமின்றிக் காக்கத் தோன்றியவுடன் அழிந்ததை உவமையாகக் கூறுவது வியக்கத்தக்கதாக அமைகிறது.

"இடன் இன் றலைத்தரும்
இன்னாசெய் மாலை
துனிகொள் துயர்தீரக்
காதலர் துணைதர
மெல்லியான் பருவத்து
மேல் நின்ற கடும் பகை
ஒல்லென நீக்கி
ஒருவாது காத்தோம்பு
நல்லிறை தோன்றக்
கெட்டாங்கு
இல்லாகின்றால்
இருளாகத் தொளித்தே

(கலித்தொகை : நெய்தல்)

(இடன் -இடம், அலைத்தரும்-துன்பமுறுத்துகின்ற, இன்னா-கொடியவைகள், துனிகொள்-வருத்தம்மிக்க, துணைதர-வேகமாகவந்து சேர, மெல்லியான் பருவத்து, இளைய பருவத்தினன். ஒல்லென - விரைவாக, ஒருவாது-நீக்கமின்றி, காத்தோம்பல்-பாதுகாத்தல், நல்லிறை-நல்ல அரசன், இருளகத்து -இருளினுள்ளே, ஒளித்த-மறைத்து, இல்லாகின்று-இல்லாது போகின்றது)

இந்தப்பாட்டிற் கூறப்படும் உவமையிலிருந்து மிகப் பெரிதொரு அரசியல் தத்துவம் வெளிப்படுகிறது. எதுவரை அரசன் வலிமையற்றவனாக இருக்கிறானோ அதுவரை அவன் பகைகள் அவனை அழித்தொழித்து விடுவதற்கு நேரம் பார்த்துக்கொண்டே இருக்கின்றன. எப்பொழுது அவன் தன் தன்னிகரற்ற வலிமையுடையவனாக ஆகின்றானோ, அப்போதே தன் பகைகளை அவனால் அழிக்கமுடிகிறது. என்கின்ற தத்துவங்களே அவை. தலைவன் வருகின்றவரை அவளை வாட்டி வருத்திக் கொண்டிருந்த மாலைக் காலமாகிய பகை, அவன் விரைவாக வந்தவுடன் அழிந்து போகிறது என்பதை விளக்குவதற்குத்தான் இத்தகைய கருத்துப் பொதித்த உவமையைக் கூறுகின்றாள் தோழியிடம் தலைவி.

## நல்லகாலம் பிறக்கட்டும்

தலைவிக்கு நல்லகாலம் பிறக்க வேண்டுமென்று தோழி தலைவனை வெளிப்படையாக வந்து அவளைத் திருமணம் செய்துகொள்ள வேண்டுகின்றாள். எப்படியாவது தலைவிக்கு நல்லகாலம் பிறக்கவேண்டுமென்பதே தோழியின் குறிக்கோள். நெய்தல் திணைக்குரிய நெய்தல் நிலமென்பது கடலும் கடல் சார்ந்த இடமுமாகும். கடற்பகுதியில் வாழ்கின்றவளுக்கு உவமை சொல்லக் கடற்கரை நிகழ்ச்சி ஒன்று நினைவில் வந்து அமைகின்றது. வீசி ஆரவாரித்து வருகின்ற கடலின் பேரலைகளில் கடலிலுள்ள மீன்கள் கரையில் தூக்கி எறியப் பெறுகின்றன.

ஆனால் தூக்கி எறியப்பெற்ற மீன்கள் அடுத்த கணமே வேகமாக வருகின்ற மற்றோரலையினால் மீண்டும் கடலுக்குள்ளே கொண்டு செல்லப் படுகின்றன. இந்த விந்தைமிக்க அழகிய நிகழ்ச்சியைப்போல நீ இன்பம் நல்குங் காலத்து மகிழ்ந்திருந்த இவள், தற்போது பருவம் வந்ததெனப் பெற்றோர் வீட்டைவிட்டு வெளியேறாமற் பாதுகாத்தலினால் அவ்வின்பங் குறையப்பெற்று வருந்துகின்றனள். அவ்வருத்தம் போயொழியும் படியாக நீ நினது குதிரைகள் பூட்டிய திண்மையான தேரிலேறி வெளிப்டையாக வந்து பலரறிய இவளை மணந்துகொள்க, அங்ஙனம் மணந்து கொள்வாய் ஆயின் அப்போதே தலைவிக்கு நல்லகாலம் பிறக்கும். பிறக்கின்ற அந்த நல்லகாலமும் விரைவிற் பிறக்கட்டும் என்று தோழி தலைவனை மணந்து கொள்ளும்படி வற்புறுத்துகின்றாள்.

"எறிதிரை தந்திட
இழிந்த மீன் நின்றுறை
மறிதிரை வருந்தாமல்
கொண்டா ங்கு
நெறிதாழ்ந்து சாயினள்
வருந்தியாள் இடும்பை
பாய்பரிக் கடுந்திண்டேர்
களையினோ விடனே"

(எறிதிரை-எறியப்படும் அலைகள், இழிந்த-கரையில் வந்து வீழ்ந்த, மறிதிரை-மீண்டும் வந்தஅலை, சாயினள்-துன்புற்றனள், இடும்பை - துன்பம், பாய்பரி - பாயுங்குதிரைகள்)

(கலித்தொகை : நெய்தல்)

இதனுள் தலைவிக்கு நல்லகாலம் பிறக்கவேண்டுமென்று தோழி தலைவனை வற்புறுத்தியுள்ள விளைவுக் குறிப்பு மாறு பாடற்ற முறையில் வெளிப்பட்டு விளங்குகின்றது. சூழ்நிலையின்றி அனுபவம் நினைவு எண்ணம் முதலிய யாவும் வேறெவற்றொடும் தொடர்புகொண்டு வெளிப்படுவதில்லை என்ற சித்தாந்தத்தை இங்கே தோழி மெய்ப்பிக்கின்றாள். தான் நெய்தல் நிலத்தினாள், அந்நிலத்து நிகழ்ச்சிகளில் தோய்ந்த அனுபவமும் பயிற்சியும் உடையவள் என்பதனை தோழி தான் கூறும் உவமையால் நிலைநாட்டுவதோடு தலைவிக்கு நல்லகாலம் பிறக்கவேண்டும் என்னும் குறிப்பையும் கூறுகின்றாள்.

## கனவு தந்த காதலர்

அவள்தன் காதலனைக் கனவிற் கண்டாள். கனவு பலிக்கும் என்பது அவள் காதல் நெஞ்சத்தின் நம்பிக்கை. நம்பிக்கைதானே என்றும் நைந்த உள்ளத்தில் மகிழ்ச்சி பூக்க வைக்கிறது. பேசுகிறாள் அவள் : என் காதலனை நாள் நேற்றிரவு கனவிற் கண்டேன். தோழீ! அது கனவாகமட்டும் இருக்குமென்று நான் நினைக்கவில்லை. நான் கண்ணாரக்கண்டு மகிழக் கனவிற் காட்சி கொடுத்த அழகிய கானல்களையுடைய தலைவன் நனவிலும் வருவது உறுதி என்று இடைவிடாது நினைந்து அவ்வரவு என்னும் எல்லைக்கோட்டில் அந்த ஆசை பற்றுக் கோடாக எனது பெறுதற்கு அரிய உயிர் நிற்கின்றது என்று தன்னிடத்துத் தோன்றிய அவலமென்னும் சுவை வெளிப்படும் படியான தோய்ந்த உணர்வு வெளிப்படத்தக்க சொற்களால் பேசினார் தலைவி.

"கனவினாற் கண்டேன்
தோழி காண்டகக்
கனவின் வந்த
கானலஞ் சேர்ப்பன்
நனவின் வருதலும்
உண்டு என
அவன் வரை நின்றதென்
அரும் பெறல் உயிரே"

(கலித்தொகை : நெய்தல்)

*காண்டக-காணும்படியாக, கானல்-கடற்கரைப்பகுதி, சேர்ப்பன் - நெய்தல் நிலத்தலைவன், அவன்வரை - அவன் எல்லையாக, அரும்பெறல் - பெறுதற்கு அரிய)*

*நல்ல கனவு கண்டுவிட்டால் அது பலிக்கவேண்டுமென்று எண்ணாதவர்கள் நம்மில் யாருமில்லை அதேபோல் தீய கனவுகள் கண்டுவிட்டால் அது பலிக்காமல் போக வேண்டுமே என்று எண்ணாதவர்களும் நம்மில் யாருமில்லை. அதன் நுட்பமென்ன? நன்மையை விழைவதும், தீமையை அஞ்சி ஒதுக்குவதும் மனிதனில் ஊறிவிட்ட இயல்புகள். மாற்றுவது என்பது இலேசில் முடிவது அன்று. சாதாரண மனித உலகத்தின் இயல்பே இப்படியானால் உயிரோடு உயிரும் உணர்வொடு உணர்வும் இரண்டறக் கலந்து வாழும் காதல் உலகத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. நல்ல கனவாகிய காதலரின் வரவு நனவிலும் நிகழுமென்று அவர் எண்ணியதில் என்ன தவறு இருக்கமுடியும். கனவு தந்த காதலரை நனவு தரவேண்டுமென்று வேண்டுகிறாள் அவள். நனவுதான் தரக்கூடாதா? என்ன ? தரத்தான் தரட்டுமே ! கனவு தந்தது, நனவு தரட்டும். அவள் மகிழட்டும்.*

## இந்நூல் எழுந்த காலம்

சங்கத்தொகை நூலாகிய எட்டுத் தொகையில் ஒன்று பரிபாடல். பதிற்றுப்பத்திற்கு அடுத்தாற்போல இடம் பெறுவது. இதன் நயங்கருதிப் போலும் 'ஓங்கு பரிபாடல்' என்று அடைமொழி கொடுத்துச் சிறப்பித்தனர். இருபத்தைந்தடிச் சிற்றெல்லையும் நானூறு அடிப் பேரெல்லையும் உடையதாகி இன்னபாட்டு என்னும் வரையறை இன்றி ஆசிரியம், வெண்பா, கலி முதலியனவற்றை தன்பாற் பிரித்து ஏற்றுக்கொண்டு நிகழும் ஒருவகை இசைப் பாட்டிற்கு பரிபாடல் என்று பெயர்.

ஆசிரியர் தொல்காப்பியர் காலத்திற்குப் பிறகு இப்பரிபாடல் என்னும் வகையைச் சார்ந்த பாடலே வழக்கு விழுந்து போனது. பிற்காலத்து யாப்பிலக்கண நூல்களாகிய, யாப்பருங்கலம், காரிகை முதலியன இதற்கு யாப்பிலக்கணங் கூறத்தவறிவிட்டன. இதனால் பரிபாடலின் பழமை ஒருவாறு வெளிப்பட முடிகிறது.

## பாடல்களின் தொகை

இந்நூலில் எழுபது பரிபாடல்கள் இருந்திருக்கின்றன என்பதை நாம் அறிவதற்குச் சில சான்றுகள் துணை செய்கின்றன. இறையனாரகப் பொருளுரையாலும் செய்யுளியலுக்குப் பேராசிரியர் செய்த உரையாலும் அம்முடிபு நமக்குக் கிடைக்கிறது. இந்த எழுபது பாடல்களுள் திருமாலைப்பற்றிய பாடல்கள் எட்டு என்றும், முருகக் கடவுளைப்பற்றிய பாட்டு முப்பத்தொன்று என்றும், காடுகிழாளாகிய காளிதேவிக்கு ஒரு பாட்டு என்றும், வையைக்கு இருபத்தாறு பாட்டென்றும் மதுரைக்கு நான்கு பாட்டென்றும் அறியப் பழைய வெண்பா ஒன்று நமக்கு உறுதுணை செய்கின்றது.

"திருமாற் கிரு நான்கு செவ்வேட்கு முப்பத்
தொரு பாட்டுக் காடுகாட் கொன்று – மருவினிய
வையை யிரு பத்தாறு மாமதுரை நான் கென்ப
செய்ய பரிபாடற் றிறம்"

ஆனால் இப்பொழுது நமக்குக் கிடைக்கும் இந்த நூற் பாடல்கள் இருபத்திரண்டே ஆகும். இவ்விருபத்திரண்டு தவிரப் பழைய உரைகளில் மேற்கோளாக வந்த இரண்டு முழுப் பாடல்களும், சில பாடலின் பகுதிகளும் கிடைக்கின்றன. இந்த அளவிலாவது இந்நூலை நாமறியச் செய்த பெருமை கலாநிதி ஐயரவர்களையே சாரும்.

## பாடிய ஆசிரியர்கள்

இந்நூலின் பாடல்களைப் பாடிய ஆசிரியர்கள், ஆசிரியன் நல்லந்துவனார், இளம் பெருவழுதியார், கடுவன் இளவேயினனார், கடும்பிள்ளைப் பூதனார், கீரந்தையார், குன்றம்பூதனார், கேசவனார், நப்பண்ணனார், நல்லச்சுதனார், நல்லழுசியார், நல்லெழுனியார், நல்வழுதியார், மையோடக் கோவனார் முதலியோர்ஆவர். இவர்கள் தற்போது கிடைக்கும் பாடல்களின் குறிக்கப்பெற்றிருக்கின்றனர் இப்போது கிடைக்காத பாடல்களின் ஆசிரியர்கள் பெயர் நமக்குத்தெரிய வழியில்லை. இனி ஒவ்வொரு பாடலிற்கும் பண் அமைத்துக்கொடுத்த இசையாசிரியர்கள் பெயரும் பாடல்களின் கீழே குறிக்கப் பெற்றிருக்கிறது நூற்பாடலுக்கு ஆசிரியர்களான கேசவனார், நல்லச்சுதனார் ஆகிய இருவரும் சிறந்த இசையாசிரியர்களாகவும் இருந்திருக்கிறார்கள் என்பது முறையே இந்நூலின் பன்னிரண்டாம் பாடலாலும், பதினாறு, பதினேழு, பதினெட்டு, இருபது ஆகிய பாடல்களாலும் தெரிய வருகிறது.

இது தவிரக் கண்ணகனார், கண்ணன் நாகனார், நந்நாகனார், நல்நாகனார், நாகனார், பித்தாமாத்தர், பெட்டனாகர், மருத்துவன் நல்லச்சுதனார் ஆகிய இசைப் பேராசிரியர்களும் இந்நூற் பாடல்களுக்கு பண்ணமைத்துள்ளார்கள். இனிப் பாலையாழ்ப்பண், நேர்திறப்பண், காந்தாரப்பண் என்ற மூன்று பண்களே இப்போது கிடைக்கும் இந்நூற் பாடல்களுக்கு

அமைந்த பண்வகைகள். இவற்றுள்முதற் பாடலுக்குப் பண், பண்ணாசிரியர், பாட்டாசிரியர். இவர்களுள் ஒருவர் பெயருமே தெரியவில்லை. எனவே முதற்பாடல் தவிர்த்துப் பார்த்தால். இரண்டாம் பாடலிலிருந்து பன்னிரண்டாம் பாடல்வரைக்கும் "பாலை யாழ்ப் பண்ணைச் சேர்ந்த பாடல்கள் பதின்மூன்றிலி ருந்து பதினேழுவரைக்கும் உள்ள பாடல்கள் நேர் திறப் பண்ணைச் சார்ந்தவை. பதினேழாம் பாடலிலிருந்து இருபத்தொன்றாம் பாடல் வரை காந்தாரப் பண்ணைச் சார்ந்தவை. இருபத்திரண்டாம் பாடலுக்கும் உரையிற்கிடைத்த ஏனைய இருபாடல்களுக்கும், பண் முதலியன கிடைக்கவில்லை. நேர்திறப்பண்ணை இந்நூல் "பண்ணோ திறம்" என்று குறிக்கிறது. "பண்ணேர்திறம்" என்றிருக்க வேண்டும்.

ஒருவேளை "பண்நோதிறம்" என்று பிரித்துச் சோக பாவத்தை வெளிப்படுத்தும் பண்ணாக இருக்கலாமோ என்றும் ஐயுற நேரிடுகின்றது. இப்படிப் பெரும்பாலும் ஒரே பண்வகையிற்பயின்று வரும் பாடல்களுக்கு இசை வகுப்பது சிறப்பன்று ஆதலால், இப்பாடலெழுந்தகாலத்து உரிய பண்களில் இவற்றை இசையோடு கற்பித்து வந்த ஆசிரியர்களும் இவர்களே என்று கூறுவது இன்னும் பொருத்தமாக அமையும். இறையனார் களவியலுரை கர்ண பாரம்பரியம் பெற்று நடந்ததுபோல் இந்நூல் கர்ணபாரம்பரியம் பெற்று நடக்கமுன்னின்றவர்கள் இவ்வாசிரியர்கள் என்பது சாலப் பொருந்தும்.

## இதன் கால வரையறை

இதன் தோற்றக் காலத்தைப் பற்றிய இருவேறுபட்ட கருத்துக்கள் உண்டு. இது முதற் சங்ககாலத்துத் தோன்றியிருக்கவேண்டும் என்பது ஒருசிலர் கருத்து. இடைச்சங்ககாலத்துத் தொல்காப்பியம் தோன்றிய பின்னர்அதிலிருந்து இலக்கணம் பெற்று எழுந்தது என்பது பெரும்பான்மையோர் கருத்து. முதற்சங்க வரலாறு கூறும் ஆசிரியப்பா ஒன்றனுள் பரிபாடலைக் குறிப்பிடுவதே முற் கூற்றினர்க்குச் சான்றாக அமையும்.

ஆனால், முதற்சங்கம் தென் மதுரைக் கண்ணதாகலானும் வையையாறு ஆண்டின்மையானும் அவர்கூற்றுச் சற்றும்

நினைக்கத் தக்கது அன்று. பஃறுளியாறும் பன்மலையடுக்கமும் கடல்கோளாற் பாழ்பாடு எய்துவதற்கு முன் தொல்காப்பியம் நிலத்தரு திருவிற் பாண்டியன் அவையத்து அதங்கோட்டாசிரியர் தலைமையில் அரங்கேறியது. அதற்குப் பிறகே கடல்கோள் நிகழ்ந்ததெனக் கொள்ள வேண்டும். வையை யாறும், செவ்வேள் பரங்குன்றும், யாண்டுக் குறிக்கப்பெறுமாயினும் அஃது ஐயமின்றி இடைச் சங்க காலத்துத் தொல்காப்பியம் அரங்கேறி முடிந்த பின் நிகழ்ந்த கடல்கோள் கெடுப்பக் கெட்டுக் கூடற்கண் நிகழ்த்த சங்கத்தில் தோன்றியதே எனக் கொள்ள வேண்டும். இற்றை நாள் ஆராய்ச்சியாளர் ஒருசிலர் பரிபாடலை ஆறாம் நூற்றாண்டு ஏழாம் நூற்றாண்டு என்று போலி ஆராய்வு செய்கின்றனர். முதலாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலேயே பரிபாடல் என்னும் பாட்டு வழக்கு வீழ்ந்தது. வெள்ளிடை மலை போலிருக்க ஆறாம் நூற்றாண்டிற் பரிபாடல் எழுந்தது என்று கூறுவது நகைக்கத்தக்க செய்தியாகும்!

ஆகவே இன்னதென வரையறைப்படுத்த முடியாவிடினும் இடைச்சங்க காலத்து முற்பகுதிக்குப் பின்பு அல்லது கடைச் சங்க காலத்துப் பிற்பகுதிக்கு முன்பு ''பரிபாடல்'' தோன்றியிருக்கவேண்டும் என்ற முடிவிற்கு வருகின்றோம். இனி, எட்டாம் நூற்றாண்டினராகக் கருதப்படுகின்ற பரிமேலழகர் காலத்தும், அவர்க்கு முற்பட்ட ஓரிரு நூற்றாண்டுகளில் இருந்தவர் என்று கருதப் படுகின்ற காலத்தினவரான பேராசிரியர் உரையிலும், இறையனார் களவியல் தோன்றின காலத்தும் இந்நூலின் எழுபது பாடல்களும் இருந்திருக்கின்றன என்பது ஆங்காங்குக் கிடைக்கும் சான்றுகளால் தெரிய வருகின்றது.

எனவே மூன்றாம் நூற்றாண்டிற்கும் பன்னிரண்டாம் நூற்றண்டிற்கும் இடைப்பட்ட காலத்திலாதல் பன்னிரண்டாம் நூற்றண்டிற்கும் பதினேழாம் நூற்றண்டிற்கும் இடைப்பட்ட காலத்திலாதல் இந்நூல் சிதைந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. இந்நூல்சிதைவு எய்திய பின்னர் பரிமேலழகர் இதற்கு உரை எழுதியிருப்பார் என்பது அசம்பாவிதம். பரிமேலழகர் இந்நூல் முற்றும் இருந்த காலத்து இதற்கு உரைஎழுதத் தொடங்கி உரை எழுதி முடித்தும் இருப்பர் என்பதே பொருந்தும்.

திருக்குறளுக்கு எழுதிய முறையில் பரிபாடலுக்கு எழுதியிருக்கின்றாரா?என்றால் நூலுக்கும் நூலுரையாசிரியனுக்கும் இடையே உள்ள இயைபைப் பொறுத்த செய்தியாகும் அது. ஆனால் திருக்குறளுக்குச் செய்த முயற்சியைக் காட்டிலும் பரிபாடலுக்கு அவர் செய்திருக்கும் முயற்சி மிகுதிதான் என்று இந்நூலுக்குரிய உரைப்பாயிரம் கூறும் "கந்தி" என்னும் "இலக்கியப்போலி" செய்த இடைச் செருகல்களையும். நூலின் உண்மைப் பகுதிகளுக்கு மெய்யுரை காணவும் பரிமேலழகர் நல்ல முயற்சி செய்திருக்கின்றார். பரிபாடல் உரையாசிரியர் பரிமேலழகர் என்பது ஏறக்குறைய பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆழ்வார் திருநகரியில் இருந்த "திருக்குறள் - பதிமேலழகருரை-நுண்பொருள் மாலை" ஆசிரியர் இரத்தின கவிராயராலும் தெரிகிறது. இவ்வுரை பெரும்பாலும் குறிப்புரையாகவே அமைந்திருக்கிறது. இன்றியமையாத இலக்கண அமைதிகளை நன்கு விளக்குகிறது.

## பரிபாடற் காட்சிகள்

இனி, நமது தலைப்பிற்கு வருவோம். இதுவரை கூறிய ஆராய்ச்சி முன்னுரை பரிபாடற் பொழிலுக்குள் நுழைவதற்குரிய தகுதிக்காக உரைக்கப்பட்டது. இனி, நாம் காணவேண்டியது பரிபாடற் பொழிலுள் உள்ள சில அழகிய காட்சிகளே ஆகும். "இறைவனைப் பற்றிய முடிவான தத்துவங்களையும். வையையாற்றின் அழகிய யாற்று வருணனையையும் (River Description) பரங்குன்றிற் பெருமான் காட்சியையும், பழமுதிர்சோலைத் திருமால் காட்சியையும். மாமதுரைத்திருநகரின் ஈடில்லாத பெருமாண்பையும் பரிபாடற் காட்சிகளாக நாம் காண வேண்டும்! அம்முறையிற் காண்பதுதான் நம்முடைய தலைப்பின் நோக்கம். "இலக்கியச்சுவை நுகர்ச்சி வெளியீடு" (Literary Appreciation) என்ற முறையில் பரிபாடற் காட்சிகளைக் கண்டால் சுவைப்பதற்கு மிகுதியான இடம்பெறமுடியும். எங்கும் எப்போதும் கவிதை என்பது காணுங் கண்களைப் பொறுத்த அளவுதான் காட்சி தர முடியும் "கண்களில் உள்ள சுவைநோக்கு வெறுப்பு நோக்கு. இவைகளுக்குத்தகுந்த முறையிற்றான் பயன்தரும்.

## 1. எங்கும் நிறைந்த எம்பெருமான்!

கடவுள் உலகின் ஐம்பெரு பூதங்கள் எல்லாம் தாமேயாகி விளங்குகின்றார். அவருடைய ஒவ்வொரு பண்புகளும் ஐம்பெரும் பூதங்களின் இயக்கத்தில் எல்லாரும் காண வெளிப்படுகின்றன.

"Thou the light of sun
Thou the soft and cool of moon
Thou the fall of rain
Thou the smell of all
flowers in the world
Thou the colour of the
clouds and air
Thou the king and kingdom of the world"

என்று கடவுளை எங்குமாகக் கண்டு இன்புற்றான் பிற்காலத்து ஆங்கிலக் கவியொருவன். இதையே பன்னூறு ஆண்டுகட்கு முன்னர் எடுத்துக்காட்டியது பரிபாடல். கதிரவனிற் காணும் விளக்கமும் உணரும் வெம்மையும், சந்திரனிற் காணும் சாயலும் உணரும் குளிர்ச்சியும், வானத்தில் பெய்யும் மழையும் மழை பெய்யும் வள்ளன்மையும் உலகத்தைத் தாங்குதலும், உலகத்தை ஆளுதலும், உலகத்துப் பூக்களின் ஒளியும் மணமும், நீரின் அகலமும், நீரின் பரந்த நீலப் பரப்பின் தோற்றமும் வானத்தின் ஒலியும் வானமுகில்களின் வண்ண உருவமும். காற்றின் வரவும் போக்கும். ஆகிய இவை யாவும் எங்கும் நிறைந்து விளங்கும் எம்பெருமானின் இயக்கங்களே! ஆகாயம் சத்த குணமுடையது" என்பது தருக்க நூல் முடிவு (The air is sound-field) என்பர் மேல்புல நுண்ணூற் கலைஞரும்

"நின் வெம்மையும்
விளக்கமும் ஞாயிற்றுள
நின் தண்மையும்
சாயலும் திங்களுள
நின் சுரத்தலும்
வண்மையும் மாரியுள
நின் புரத்தலும்
நோன்மையும் ஞாலத்துள
நின் நாற்றமும்

ஒண்மையும் பூவினுள
நின் தோற்றமும்
அகலமும் நீரினுள
நின் உருவமும்
ஒலியும் ஆகாயத்துள
நின் வருதலும்
ஒடுக்கமு மருத்தினுள"

(பரிபாடல்)

ஞாயிறு - கதிரவன், சாயல் - மென்மை, திங்கள் - சந்திரன், மாரி - மழை, புரத்தல் - ஆட்சி, நோன்மை - சுமை, ஞாலம் - உலகம்
நாற்றம் - மணம், ஒண்மை - ஒளி, ஒடுக்கம் - போக்கு
மருந்து - காற்று, வருதல் - தோன்றுதல்

கடுவன் இளவெயினானார் என்ற இதன் ஆசிரியர் கடவுட் தத்துவத்தை எம்மதத்தினரும் சம்மதமென்று ஒப்பும்படியாக உரைக்கின்றார். கடவுளே உலகின் மூல அணுவாய் முழுப்பேருலகின் இடமுழுதும் அணுவளவு இடைவெளியுமின்றி ஒன்றிச் செறிந்த மூலப் பரம் பொருள் என்பதை ஆசிரியர் நன்றாக விளக்குகிறார். காலை, மாலை, கடவுளை வழிபடும் பிரார்த்தனைப் பாடலாக கொள்ளத் தக்கது.

## 2. நட்பும் பகையுமற்ற நாதன்!

இறைவனுடைய நோக்கு பொதுநோக்கு. ஒரு தாய் தன் மக்களை எந்த ஒரு சமநோக்கோடு பார்க்கின்றாளோ அதே சமநோக்குத்தான் மக்களிடம் இறைவனுக்கும் இருக்கிறது. பெருங்குற்றம் உண்டாகும்படி வருத்துகின்ற சினமும். கடுமையும், கொடுமையும், நேர்மையும், வெம்மையும், தண்மையும், ஆகிய இப்பண்புகள் இருக்கவேண்டியஇடத்து இவையுடையவனாகவும் இருக்கக்கூடாத இடத்து இவை இல்லாதவனாகவும் விளக்குகின்றான் இறைவன். தனக்குப் பகையான உயிரிலும் தனக்குப் பகையில்லாத உயிரிலும் எல்லா உயிரிலும் இன்பம் செய்யக்கூடியவன்.

*தன்னை விரும்பும் உயிர்க்கு இன்பமும் விரும்பாத உயிர்க்குத் துன்பமுமாகச் செய்பவனல்ல இறைவன். விரும்புவர், விரும்பாதவர், நட்பு, பகை போற்றுபவர், போற்றாதவர், என்னும் இவைகள் அவனுக்கு இல்லையென்பதை நன்றாக உணரும் அறிஞர்கள் ஆராய்ந்தால் வேற்றுமை சிறிதும் இன்மை வெளிப்படும், நட்பும் பகையுமற்ற நாதனே இறைவன் என்பது இறை ஞான முணருந் தகுதி வாய்ந்தவர்களுக்கு வெளிப்படையான செய்தியாம்! இறைவன் அன்பர் மனத்திற்கொண்ட உருவே தன்னுருவாக உடையவன். அவன் தனக்கென வேறுருவம் ஏதுமில்லாதவன். பேசுவோர் பேசும் வடிவுகளிலெல்லாம் பெரு விருப்போடுஅமர்ந்து தன் அருளொளி மிகுத்து இருள்கடிவன் எம்பெருமான். காலையும் மாலையும்அவனைக் கரங் கூப்பி வணங்கி வணங்கி ஒளிபெற்றுத் தனது உறுதிப் பொருளைத் தேடி நடந்து கொண்டிருக்கின்றது உயிர்க்குலம். உயிர்குலம் தடுமாறும்போது கோடானுகோடி ஊன்று கோல்களாக வந்திருந்து திருவருள் உதவுகிறது உயிர்க்குலம் வாழவேண்டுமென்றுதான் அயர்வின்றி ஊழிவரை விழித்திருக்கிறது அருள்.*

*கொட்டும் மழையிலும் குமுறும் இடியிலும்,வெட்டும் மின்னிலும், வீசும் புயலிலும்; எரியும் தீயிலும். எம்பெருமான் மறைந்து நின்று இயக்குகின்றான்! அவனால் ஆகாததில்லை!! ஆக வேண்டியதை அவன் ஆக்குகிறான் - அழிக்க வேண்டியதை அவன் அழிக்கிறான்!!! நட்பால் ஆக்கவோ - பகையால் அழிக்கவோ நாதன் எண்ணுவதும் இல்லை?*

**"கடுநவை யணங்கும்**
**கடுப்பு நல்கலும்**
**கொடுமையுஞ் செம்மையும்**
**வெண்மையுந் தண்மையும்**
**உள்வரி யுடையை**
**இல்வழி இலையே**
**போற்றார் உயிரினும்**
**போற்றுந ருயிரினும்**
**மாற்றே மாற்றல்**

இலையே நினக்கு!
மாற்றோரும் இலர்
கேளிரும் இலரெனும்
வேற்றுமை இன்றது
போற்றுநர்ப் பெறுனே
மனக்கோள் நினக்கென
வடிவபேறு இலையே"

(பரிபாடல்)

நவை - குற்றம், அணங்கு - துன்பம், கடுப்பு - வெகுளி,
கேளிர் - நண்பர், மாற்றார் - பகைவர், போற்றுநர் - எண்ணுவோர்
மனக்கோள் - மனத்திற்கொண்டது, செம்மை - அருளும் தன்மை

## 3. ஏவலும் இயற்றலும்!

மனிதகுலம் இறைவனுக்கு இட்ட பெயர்கள் பல. எடுத்த கோவில்களும் கணக்கில. ஆனால் இப்பெயர்களில் அல்லது கோவில்களில் எதையும் அவன் வெறுத்து ஒதுக்குவதில்லை. எந்த இடத்திலும் அவன் விருப்பமுடனேதான் இருக்கிறான். பளிங்கு மண்டபத்தில் நடக்கின்ற அதே இறைவனுடைய திருக்கால்கள் பருக்கைக் கற்கள் நிறைந்த வழியிலும் நடக்கின்றன. இரண்டு கையிலும் தங்கக் கடகமிட்டுப் பட்டுடையணிந்து கூப்புங்கைகளிலும் சரி, அரைமுழத்துண்டு கட்டிக் கொண்டு வெறுங்கையோடு கூப்புங்கைகளிலுங் சரி. அவ்வன்பர்களுடைய தாழ்ந்த பணிவான வணக்கத்திற்குள் சிக்கக் கூடியவன் இறைவன். மனிதருக்கெல்லாம் முதல்வனான ஆளுபவனும் அவன். மனிதரெல்லாம் ஏவும் ஏவலாளனாகவும், அவரேவாமல் தானே முற்றும் அறிந்து இயற்றுபவனாகவும் விளங்குகிறான் அவன்.

அவ்ரவர் செய்து முடித்துக் கொண்ட பொருள்களுக்கெல்லாம் காவலாளனும் அவன். அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை அவன். கூப்பும் கைகளுள் கூடி நின்று காக்கும் காவலன் அவன். மானிடர் ஏவும் மாதவனும் அவன். ஏவாது இயற்றும் இறைவனும் அவன். ஏவலும் இயற்றலும் அவனுடைய தொழில்கள். அதே நேரத்தில் பேருலகத்தை ஆக்கலும் அழித்தலும் அவனுடைய கடமை. நாம் அதனை அவனது

உரிமை என்று எண்ணி அஞ்சுகிறோம் அவன் அதை தன்னுடைய கடமை என்று எண்ணி அருளுகிறான்.

அடியார்க்கடியனாய்ப் படியார்க்குப் படியனாய்க் கொடியார்க்குக் கொடியனாய். விளங்குகின்றான் முதல்வன். அவன் கோயில் வாயிலில் அரசனுக்கும் ஆண்டிக்கும் ஒரே வரவேற்பு. விரிந்து பரந்து விண்முகடு தடவும் பேரொளிப் பிழம்பாய் கீழ்த்திசையில் அவன் ஆலயம் தெரிகிறது. நெருங்கினோர்க்கு அது வெறும் மாயையாக மறைந்து விடுகிறது. தொலைவில் நின்று கண்டோர்க்கு அந்தத்துய ஒளி வெள்ளம் இடையறாது காட்சியளிக்கிறது. காட்சியளிக்க ஏவினால் அவன் காட்சியளிக்கிறான். வேண்டுவதை இயற்றித் தருகிறான். நாம் ஏவுகிறோம். அவன் இயற்றுகிறான். வேறில்லை.

**எவ்வயினோயும்**
**நீயேநின் ஆர்வலர்**
**தொழுதகை யமைதியின்**
**அமர்ந்தோயும் நீயே**
**அவரவர் ஏவ**
**லாளனும் நீயே**
**அவரவர் செய்பொருட்**
**கரணமும் நீயே.**

(பரி பாடல்)

எவ்வயினோயும்-எவ்விடத்திலும் இருப்பவனும் அமைதி-தாழ்ச்சி
செய்பொருட்கரணம் - செயல்கட்கு முதன்மை

## 4. வேண்டும் வரமும் வேண்டா வரமும்

கடுவன் இளவெயினார் என்ற பரிபாடற் புலவர் இறைவனிடம் வரம் வேண்டுகிறார்: அவர் தாம் வேண்டும் முகமாக உலகிற்கே வேண்டிய பாடம் ஒன்றை அறிவிக்கிறார். பொன் வேண்டும், பொருள் வேண்டும், போகம் வேண்டும் என்று வேண்டாது, அருள் வேண்டும், அன்பு வேண்டும், அறம் வேண்டும் என வேண்டுவதுதான் மனிதத் தன்மைக்கு அழகு. பொன்னும் பொருளும் போகமும் வேண்டுவது தன்னலநோக்கம். அன்பும் அறமும் அருளும் வேண்டுவது உலக நல நோக்கம்.

எனக்கு எனக்கு என்று வேண்டி மனித வாய் வறண்டு போனது. செல்வம், செல்வம் என்று மனிதன் சீரழிந்து கொண்டிருக்கிறான்.

அந்தப் போலி நோக்கம் சாக வேண்டும். அன்பு, அருள், அறம் என்று இறைவனை வேண்ட வேண்டும். மனித உலகம் அந்தப் பெருநோக்கத்தோடு ஆதிமுதலை அணுகவேண்டும். எனக்குக் கொடு என்று கேட்பது பிச்சை. உலகிற்குத் தா என்று கேட்பது மனித உரிமை - கடவுளோடு மனிதனுக்குள்ள உறவு முறையுங்கூட. கடுவன் இளவெயினார் வேண்டுகிறார் - “இறைவனே! உன்னிடத்தில் யாங்கள் கேட்பவை பொருளும், பொன்னும், போகமும் அல்ல! அருளும் அன்பும் அறமும் ஆகிய இம் மூன்றுமேயாம் நின்னிடத்தில் வேண்டும் வரம்". பொருளும் பொன்னும் போகமும் வேண்டுவது தகுதியில்லை! வேண்டினால் இறைவன் தரல் வேண்டும் என்னும் உறுதியும் இல்லை. பொருளும் பொன்னும் போகமும் தனிமனிதனை வாழ வைக்கும் கருவிகள். அருளும் அன்பும் அறனும் ஆகிய இவைகள் மனித உலகை வாழ வைக்கும் அருட்பேறுகள். பொருளால் செருக்கும்,

பொன்னால் மயக்கும் போகத்தால் மறவியும் பெருக. யான் மனிதனாக வாழ இடமிருக்காது. அருளால் பொதுமையான அன்பும், அன்பால் அறமும் பல்க யான் மனித உரிமையை நிலைநாட்ட வேண்டுமென்று விரும்புகின்றேன். எனக்கல்ல என்னுடன் வாழும் உலகிற்கும் அருள் வரமும் அன்பு வரமும் அறவரமும் கொடு, “இன்றைய உலகில் கடவுள் வழிபாட்டு முறையில் மனித உலகம் மறந்துபோன ஒரு செய்தியை நினைவூட்டுகின்றார் புலவர். எது வேண்டும் வரம், எது வேண்டா வரம் என்பதனை உருக்கமாக வெளிப்படுத்துகின்றார்.

“யா அ மிரப்பவை
பொருளும் பொன்றும்
போகமுமல்ல
நின்பால் அருளும் அன்பும்
அறனும் மூன்றும்”

(பரிபாடல்)

இரப்பவை - கேட்கின்றவை, நின்பால் - நின்னிடத்தில்

## 5. எல்லாம் நீயே!

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களும் அவற்றின் நுகர்ச்சியுணர்வும் ஆகிய எல்லாம் அவன் செயல். இவ்வைம்புலன்களுக்கும் உரிய ஐம்பொறிகளும் அவன் சாயைகள். அவன் நின்றியக்கும் அதிசயக்கருவிகள். இவ்வைம்புலன்களுள் ஓசைக்கு இடனாகிய விசும்பும் அவனது அருள் நிழலின் பரப்பே. ஓசைக்கும் உணர்வுக்கும் இடனாகிய காற்றும் அவனியக்கமே. ஓசை, ஊறு, ஒளி என்னும் மூன்றினுக்கும் இடனாகிய தீயும் அவனேயாகத் திகழ்கிறான். ஓசை, ஊறு, ஒளி, சுவை என்றும் நாற்புலன்களுக்கும் இடனாகிய நீரிலும் அவன் நின்றருளுகிறான். சுவை; ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்திற்கும் இடனாகிய நிலனும் அவனாகவே நிலைத்திருக்கிறான். இப்படி அவன் ஐம்புலன்களும், ஐம்புலன்களால் உணரப்படும் பூதங்களுந் தானேயாகத் திகழ்தலின், மூலப்பகுதியும், அறமும், அநாதியான காலமும் வானமுங் காற்றொடு கனலுங் கூடிய இம்மூவேழுலகத்தில் முற்றி நின்று வாழும் உயிர்கள் யாவும் அவனிடத்தைச் சார்ந்து அவனாகவே அவனது சாயைகளாகவே வாழ்வன ஆகின்றன. அவனே உலகம், அவனே உயிர்கள், அவனே புலன்கள். எல்லாம் அவனே. திறமையான ஒரு நடிகனாக இருந்து உலக அரங்கத்தை நிலைநின்ற புகழோடு ஆணாகவும், பெண்ணாகவும் எல்லாமாகவும் நடித்து இயக்கி வருகிறான் அவன். அவன் இல்லையானால் அந்தப் பேரரங்கு அடியோடு சாதல் ஒருதலை. அவனே காலமூலன்-ஏன் காலகால கோலாகலனுங் கூடத்தான்.

**"சுவைமை இசைமை**
**தோற்றம் நாற்றம் ஊறு**
**அமைவும் நீயே**
**யடுபோர் அண்ணால்**
**அவையவை கொள்ளும்**
**கருவியும் நீயே**
**முந்தியாம் கூறிய**
**ஐந்தன் உள்ளும்**

ஒன்றனில் போற்றிய
விசும்பு நீயே
இரண்டின் உணரும்
வளியும் நீயே
மூன்றில் உணரும்
தீயும் நீயே
நான்கின் உணரும்
நீரும் நீயே
ஐந்துடன் முற்றிய
நிலனும் நீயே
அதனால்
நின் மருங் கின்று
மூவே மூலகும்
மூலமும் அறனும்
முதன்மையின் இகந்த
காலமும் விசும்பும்
காற்றொடு கனலும்".

(பரிபாடல்)

இதைப் பாடிய ஆசிரியர் நல்லழுநியார், கடவுள் - உலகு - இரண்டிற்குமுள்ள இயைபை விஞ்ஞான முறையில் விளக்கும் இவரது திறமை போற்றுதற்குரியது ஆகும்.

சுவை, ஒளி, ஓசை, ஊறு, நாற்றம் என்பன ஐம்புல உணர்வுகள். "சத்தப் பரிச ரத ரூப கந்தம்" என்று இவற்றைக் கூறுவர். இவ்வைம்புல உணர்வுகளும் நிகழ்கின்ற இடங்களாக இருப்பவை, மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள். இவ்வைம்புல உணர்வுகளுள் ஆகாயம் ஓசைப் புலனுக்கு மட்டும் உரியது. காற்று ஓசைக்கும் உணர்வுக்கும் உரியது. தீ, ஓசை, உணர்வு, ஒளி என்னும் மூன்றிற்கும் உரியது. நீர், ஓசை, உணர்வு, ஒளி, சுவை என்னும் நான்கிற்கும் உரியது. நிலம், சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐம்புலன்களுக்கும் உரிய பொருளாக அமைகின்றது. இவைகளுக்கெல்லாம் ஆதி மூலனாக விளங்குகிற அருட்பெருஞ்சோதியே இறைவன் என்பது விளக்கப்படுகிறது.

## 6. எமது விருப்பம்

"விருப்பெலாங் கடந்து வீடு நெறிதேடும் எமக்கும் ஒரு பெரிய அடங்காத பேராவல் உண்டு. அவிக்க அவிக்கப் பற்றும் அகன்ற காட்டெரிபோல எம்முள் பரவுகிறது அவ்விருப்பம். தோன்றி முடிந்ததும், இனித் தோன்றப் போவதும், இப்பொழுது தோன்றிக் கொண்டிருப்பதும் ஆகிய காலக் கூறுபாடுகளைக் கடந்து அக்காலங்களெல்லாம் தன் திருக்காலடி நிழலில் தங்க நிலை பெற்றிருக்கிறான் இறைவன். தன்னை ஏத்தும் அன்பர்க்கு இருவினை கழிய அருளும் இயல்பினன். அன்பர்கள் மேற்கொள்ளும் அன்பாகிய ஒரேவினை மேவுகின்ற உள்ளத்தையுடையவன். பக்தன் இறைவனையே தனது தாயாகக் கருதி அவன் பொன்னடிகளைப் பொழுதும் தொழுது பரவுகிறான். பலகாலும் அவன் புகழை அடுத்தடுத்துக் கூறிய வண்ணமாக இருக்கிறான். வாழ்த்துகிறான். வாழ்த்தப் பெறுகிறான். வணங்குகிறான், வணங்கப் பெறுகிறான் அன்பன். அன்பருலகு "எமது விருப்பம்" எமது விருப்பம் என்று அல்லும் பகலும் அரற்றுவது அவனை வாழ்த்துவதையும் வணங்குவதையுமே. மேலும் மேலும் அவனை வாழ்த்தி வாழ்த்தித்தான் வாழ வழி பெறுகிறது அன்பருலகு. அப்படி அவனை வாழ்த்தி வணங்குவதைத் தனது தவப்பெரும் பேறாகக்கொள்கிறது அன்பருலகு. புலவர் நல்லெழுநியார் "எமது விருப்பம்" "எமது விருப்பம்" என்று இதையே பரிபாடலில் எடுத்துரைக்கிறார். வாழ்த்துவார் வாழ்த்தப் படுவதும், வணங்குவார் வணங்கப்படுவதும் புகழ்வார் புகழப்படுவதும் இறைஞ்சுவார் இறைஞ்சப்படுவதும் இவ்வுலக வழக்கு, முன்னும் முன்னும் யாம் செய்த தவப்பயன்கள் எல்லாம் இன்னும் இன்னும் இறைவனை வணங்கி வாழ்த்தும் ஆசை வெறியை அள்ளிக் கொடுக்கட்டும்! அதுவே எமது உயிர் விருப்பமாக அமையட்டும்.

"முடிந்ததும் முடிவதும் முகிழ்ப்பதும் அவை மூன்றும்
கடந்தவை யமைந்த கழலின் நிழலவை
இருமை வினையுமில வேத்து மவ்வ
கருமை வினைமேவும் உள்ளத்தினை
அன்னையென நினைஇ நின்னடி தொழுதனம்

பன்மாண் அடுக்க இறைஞ்சினெம் வாழ்த்தினெம்
முன்னும் முன்னும்யாஞ் செய்தவப் பயத்தால்
இன்னும் இன்னும் எம் காமம் இதுவே"

(பரிபாடல்)

முகிழ்ப்பது - தோன்றுவது, கழலின் - திருவடிகள், ஒருமைவினை - அன்பரிடம் அன்பு, அன்னையென - தாயென, நினைஇ - எண்ணி. பல்மாண் - பலவாகிய மாண்பு, காமம் - அடங்கா விருப்பம். எம்காமம் - எமது விருப்பம்.

## 7. ஊழி முதல்வன்

ஊழ்தல் என்றால் உதிர்தல், விரிதல், பிதிர்தல், மலர்தல் என்பன பொருள்கள். ஊழ் என்னும் முதனிலை செயப்படு பொருளுணர்த்தும். இதர விகுதி பெற்று உண்டாகியது ஊழி என்னும் சொல். யுகாந்தம் என வடமொழியாளர் கூறுவதையே நாம் தமிழில் ஊழி என்று குறிப்பிடுகிறோம். ஊழிக்குப் பிறகு மீண்டும் உலகு எங்ஙனம் தோன்றுகின்றது. ஊழியின் போது எவ்வாறு உலகு அழிகிறது? இறைவன் ஊழியை உண்டாக்குவதற்கும் முதல்வன், ஊழிக்குப் பிறகு உலகை உண்டாக்குவதற்கும் முதல்வன். ஆகவே அவன் ஒரு வகையிலல்ல இருவகையிலும் ஊழிமுதல்வனாகவே அமைகிறான். ஊழிக்குப் பிறகு உலகு தோன்றுவதை வடமொழி வேதங்கள் அழகாகக் கூறுகின்றன. இன்றைய ஆங்கில அறிவியல் நூல்கள் துருவித் துருவிக் காணும் உலகத் தோற்றத்தை (Birth of the world) வியக்கத்தக்க முறையில் வேதங்கள் கூறிச் செல்லுகின்றன. அதே கருத்தைப் பரிபாடல் நன்கு விளக்குகிறது.

நன்னாகனார் என்ற புலவர் உலகத்தோற்றத்தை அறிவியல் முறையில் எடுத்துரைக்கின்றார். "காற்று முதலாகிய பூதங்களின் பரமாணுக்கள் வளர்கின்ற ஒலிப்பண்பை இயல்பாகவுடைய உருவு தெரியாத வானமாகிய முதற் பூதத்தினது ஊழியும், அந்த வானத்திலிருந்து எல்லாப் பொருள்களையும் அமைதிப்படுத்தும் காற்றுத் தோன்றிய வரன்முறையான பல்ஊழியும், அந்தக் காற்றை மேலாகக் கொண்டு அதிலிருந்து சிவந்த நிறமுடைய தீயானது

தோன்றிய ஊழிகளும், அந்தத் தீயினின்றுந் தோன்றிப் பனியும் மழையும் பெய்து கொண்டிருந்த ஊழிகளும், அவைகட்குப் பின்னால் அந்நீரிலிருந்து தோன்றுவதால் மீண்டும் வெள்ளத்தினுட் கிடந்து பின் வெளிப்படுவதாகிய முற்றோன்றிய நான்கு பூதங்களுக்கு உள்ளீடாகியது நில உலகம்". ஊழியின் முதல் தோற்றம் கடலே. கடலிலிருந்து எழுவதே உலகு. ஊழி இறுதி, ஊழித்தோற்றம் இரண்டும் வெள்ளங்காரணமாகவே நிகழ்கின்றன. காற்று, வான், தீ, நீர் இந்நான்கு பூதங்களுக்கு இடையில் அந்தரமாகத் தொங்குவதே உலகம். அவ்வுலகின் ஊழிஇறுதிக்கும் சரி ஊழித்தோற்றத்திற்கும் சரி அவனே முதல்வனென்பது ஒருதலை.

"கருவளர் வானத்திசையில் தோன்றி
உருவறி வாரா ஒன்றன் ஊழியும்
உந்து வளி கிளர்ந்த ஊழூழியும்
செந்தீச் சுடரிய வூழியும் பனியொடு
தண்பெயல் தலைஇய வூழியும் அவையிற்
றுன்முறை வெள்ளம் மூழ்கியார் தருபு
மீண்டும் பீடுயர்பு ஈண்டிய வற்றிற்கும்
உள்ளீடு ஆகிய இருநிலத் தூழி"
—பரிபாடல்.

கரு-பூதங்களின் மூலமான பரமாணுக்கள்
உருவறி வாரா-வடிவு புலப்படாதபடி
ஊழி-தோற்றம்
ஊழி-முடிவு
வளி-காற்று
பீடுயர்பு-பெருமை மேலெழ
உள்ளீடு-இடையிடப்படுவது
இருநிலத்தூழி-பெரிய நிலத்தின் தோற்றம்

## 8. அருள் நிழலில் அறம்

"இறைவா! தீயினுள் தீயாய்த் தோற்றுகிறாய், பூவினுள் புது மணமாய் கமழ்கிறாய். சுக்கான் கற்களுக்கு இடையில் இரத்தினச் சுரங்கமாக விளங்கி வெளிப்படும் மணிகளாய் மாண்புறுகிறாய்.

சொற்களுக்குள் உண்மைச் சொற்களாக ஊன்றி நிற்கிறாய். அறத்தினுள் அன்பாக விளங்குகிறாய், மறத்தினுள் கொடுமை மிக்க வன்மையாகக் காட்சியளிக்கிறாய்! வேதங்களுள் மறைந்த ஒளியாய் நின்றிலங்குகிறாய்! ஐம்பெருபூதங்களுக்கும் முன்தோன்றிய முதல்வனாகின்றாய், வானத்துக் கதிரவனின் ஒளிவளமெல்லாம் நீயே யாகிறாய். தண்மதியின் இனிமையும் மென்மையும் குளிர்ச்சியும் நின்னுடையவை, எல்லாம் நீயேதான். எல்லாவற்றுள்ளும் இடையீடின்றிக் கலந்துள்ள உட்பொருளும் நீயே, ஆகையால் நினக்கு உறைதற்கு நேரமுமில்லை, உறைவிடமுமில்லை, மறதியுடையார் மறந்து மறந்து நினைவுகளைக் கெடுத்துக் கொள்வதுபோல், எல்லாப் பொருள்களிலும் நீயே இருக்கிறாய். ஆனால் இருப்பதாக எண்ணுகிறாயில்லை மறந்து போகிறாய். அது உன் மாயம்,

உலகின் முதலிலும், இடையிலும், இறுதியிலும் படைத்தல், அளித்தல், அழித்தல் என்னும் முப்பெருந்தொழிலால் ஏற்படும் வேற்றுமைகள் பற்றிப் பிறவாத பிறப்பினையுடையவன் இல்லை நீ. நின்னைப் பிறப்பித்தோரும் இல்லை. நினக்குக் கொற்றக்குடை அருள். அக்குடையைத் தாங்கும் காம்பு அறம். அருள் நிழலில் அறத்தை வளர்க்கின்றாய். இருள் பரவாது மூவேழுலகினையும் அறத்தால் அருள் நிழல் தரும் ஒரு குடைக்கீழ் ஆக்கி இன்புறுகிறாய். நின்னைச் சூனியமென்பார் பாழெனக் கூறுவர். ஐம்பெரும் பூதங்களே நீயென்பார் காலெனக் கூறுவர். ஐந்து கன்மேந்திரியங்களும், ஆகாயத்தின் இயல்பாகிய ஒலியும், காற்றும் உணர்வும், முக்குணமுடைய தீயும், நாற்பொறிகளால் உணரும் நீரும், ஐம்பொறிகளால் உணரும் நிலமும் மனமுட்பட்ட இந்திரியங்கள் ஆறும், அகங்காரமும், மூலமும் ஆகியவற்றால் எண்ணப்படும் சிறப்பை உடையவன் நீயேயாகிறாய்.

தீயினுள் தெறல் நீ
பூவினுள் நாற்றம் நீ
கல்லினுள் மணியும் நீ
சொல்லினுள் வாய்மை நீ
அறத்தினுள் அன்பு நீ

மறத்தினுள் மைந்து நீ
வேதத்து மறை நீ
பூதத்து முதலும் நீ
வெஞ்சுடர் ஒளியும் நீ
திங்களின் அளியும் நீ
அனைத்தும் நீ அனைத்தின்
உட்பொருளும் நீ
ஆதலின் உறைவும் உறைவது
மிலையே யுண்மையும்
மறவியல் சிறப்பின்
மாயமா ரனையை
முதன்முறை இடைமுறை
கடைமுறை தொழிலில்
பிறவாப் பிறப்பிலை
பிறப்பித் தோரிலையே
அருள் குடையாக
அறங்கோலாக
இருநிழல் படாமை
மூவே ழுலகமும்
ஒரு நிழல் ஆக்கிய
ஏமத்தை மாதோ
பாழெனக் காலெனப்
பாகென ஒன்றென
இரண்டென மூன்றென
நான்கென ஐந்தென
ஆறென ஏழென
எட்டெனத் தொண்டென
நால்வகை யூழிஎண்
நவிற்றும் சிறப்பினை

–பரிபாடல்

தெறல்-சூடு, நாற்றம்-மணம், மைந்து-கொடுமை, வன்மை, பூதம்-வான் முதலியன, வெஞ்சுடர்-சூரியன். அளி-தண்மை உறைவு-வசித்தல், உறைவது-வசிக்கும் இடம். ஏமம்-இன்பம் பாழ்-சூன்யம், ஊழி-தோற்றம்

## வையை வளம்

திருமால், செவ்வேள் ஆகிய கடவுளர்களைப்பற்றிப் பரிபாடல் காட்டும் சிறந்த காட்சிகளை இதுவரை கண்டோம், இனி நாம் காணவேண்டிய காட்சிகளாகப் பரிபாடலில் எஞ்சியிருப்பன வையைக் காட்சிகளும் மதுரை நகர் மாண்புமே. இப்பொழுது கிடைக்கின்ற இருபத்திரண்டு பாடல்களுள் 1,2,3,4,13,15 ஆகிய ஆறும் புறத்திரட்டிலொன்றும் திருமாலுக்குரியன. 5,8,9,14,17,18,19,21 ஆகிய எட்டும் முருகக்கடவுட்குரியன. 6,7,10,11,12,20,16,22 ஆகிய எட்டும் புறத்திரட்டில் ஒன்றும் ஆக ஒன்பதும் வையைக்குரியன. எனவே வையையைப் பாடும் பாடல்கள் தலைமை பெறுகின்றன. தலைமை பெற்றுச் சிறப்புறுகின்றன. சங்க காலத்தில் தமிழ்பாட்டென்று யார் பாடினாலும் வையை இடம் பெறாமலிருக்க முடியாது. "வையை யென்னும் பொய்யாக் குலக்கொடி" என்று கூறி இறுமாந்தார் இளங்கோவடிகள். தமிழ், வையையோடு நெருங்கிய தொடர்புடையதென்பதைத் "தமிழ் கண்டதோர்வையை" என்று விளக்கினார் கவிஞர் பாரதியார்.

வான் பொய்ப்பினும் தான் பொய்யா வளத்தில் வேண்டுமானால் காவிரி சிறப்பெய்தி இருக்கலாம். தமிழ்கண்ட பெருமை ஐயமின்றி வையைக்கே உண்டு என்பதை யாரும் மறுக்கவே முடியாது. சங்க காலத்திலிருந்த வையைநதி இடையறாத புனலொழுக்கால் மதுரையை இன்ப மூட்டியது. இன்றுபோல் அணைக்கட்டுக்கள் அன்று இல்லை. வருகிற புனலைத் தேக்காது வளமாய் ஓடவிட்டாள் அன்றிருந்த வையைத்தாய். வையை வளத்தை இடையிடையே கூறும் பேறு சங்க நூல்கள் பலவற்றுக்கும் உண்டு. எனினும் பரிபாடலின் நோக்கில் அதன் வளம் சித்திரிக்கப் படும்போது அது ஒரு தனிவனப்பை பெறுகின்றது. வையை ஒரு தெய்வீகப் பேரியாறு.

> **"ஆற்றுப் பெருக்கற்றடி சுடு நாளும்**
> **ஊற்றுப் பெருக்காலுல கூட்டும் வையை"**

என்ற மொழிக்கு இலக்காக இன்றும் வையை தவறிவிடவில்லை. இயற்கையின் உட்பொருளைத் தத்துவ ரீதியாக உணர்ந்தவர்க்கு

யாறும். மலையும், கடலும், அருவியும், பொய்கையும் முதலிய யாவும் இறைவன் சின்னங்களே. ஒவ்வொன்றிலும் தெய்வத முள்ளது. .வையையும் அப்படிப்பட்ட ஒரு நதியே. அதன் வளத்தை இனி விரித்துக் காண்போம்.

## வந்தது வெள்ளம்

நிறைந்து பரந்த கடலிலிருந்து கூட்டிச் செறிந்த நீர் கன்றியமேகக் குழாங்கள் தம் பொறையைத் தவிர்ப்பதற்காக மழையாகப் பொழிந்தன. யுகாந்த காலத்துப் பெருவெள்ளம் போலப் பரந்தது பாய்புனல். மலைச்சிகரங்களை மாசு கழுவி நீராட்டி மலைவாழ் விலங்கினங்களாகிய மான்கள் கலங்கி ஓட, மயில்கள் குரலெடுப்பப் பலப்பல அருவிகளாகப் கறங்கிப் பிறங்கி வீழ்ந்து அந்நீர்வெள்ளம். அருவிகளாக வீழ்ந்த அந்நீர் வேறுவேறு வழிகளிற் பிரிந்து சென்று இறுதியில் ஒன்று கூடிப் பரந்தயாறாகக் குற்றமில்லாத செஞ்சொற் கவிவாணர் புகழ்ந்து பாடிடப் பாய்ந்தது. அதுதான் வையை வளநதி. புனல் யாறாதலன்றிப் பூம்புனல் யாறாக வண்ணப் புனல் பரக்க வளம் பெருக்கும் வையையின் அவதாரம் பரிபாடலில் கீழ்க்கண்டவாறு கூறப்படுகிறது.

"நிறை கடல் முகந்து உராய்
நிறைந்து நீர் துளும்புந்தம்
பொறைதவிர் பசைவிடப்
பொழிந்தன்று வானம்
நிலம்மறை வது போல்
மலிர்புனல் தலைத்தலைஇ
மலையவினங் கலங்க
மலைய மயிலகவ
மலைமாசு கழியக்
கதழு மருவியிழியும்
மலிநீ ரதர்பல
கெழுவு தாழ்வரை
மாசில் பனுபவற்
புலவர் புகழ் புல

நாவிற் புனைந்த
நன்கவிதை மாறாமை
மேவிப்பரந்து
விரைந்து வினைநந்தத்
தாயிற்றே தண்ணம் புனல்"

(பரிபாடல்)

உராய்-பரந்து, துளும்புதல்-நிறைந்து அலைதல், பொறை-பாரம் பொழிந்தன்று-பொழிந்தது, மலிர்புனல்-மிக்குநீர், கதழ்தல்-உறைத்தல், அதர்-வழிகள், பனுவல்-பால், தாயிற்று-பாய்ந்தது, தண்ணம்புனல்-குளிர்ந்த நீர்

வையையில் வந்தது புதுவெள்ளம், ஊரவர் நெஞ்சில் வந்தது உவகை வெள்ளம். புதுவெள்ளத்தை அநுபவிக்க புறப்படத் தொடங்கினார். பலர் பலவித வாகனங்களில் ஏறி வையையில் நீராடி வெம்மை தணிக்க விருப்புடன் சென்றனர். தெருக்களெல்லாம் வையை வெள்ளத்தில் நீராடுவதற்கு கூட்டம் கூட்டமாக மக்கள் வெள்ளம் கரைபுரண்டோடுகிறது. வையையாற்றின் கரைகள் திருவிழாவைப் போலச் சீர்பெற்று இலங்குகின்றன, துறைகள்தோறும் மக்கள்குழாம். பல்வகை எண்ணெயும் சாந்தமும் பூசி நீராடும் மாந்தர் நிறைதலால் வையை நெஞ்சுவந்து நகைக்கின்றாள்.

அழகிய பெண் யானைகளின் மேலேறி நீராடச்சென்றனர் பலர். தேர்களின் மேலே சென்றனர் சிலர். குதிரைகளிலும் குதிரைகள் பூட்டிய பலவகை ஊர்திகளிலும் சென்ற மக்கள் அநேகர். புறச்சேரியில் நீராடப்புறப்படும் இளைஞர் கூட்டம் என்றுங் காணாதவகையில் கூடியது. வலியவர்கள் கூட்டத்தில் நுழைந்து புகுந்து சென்றனர். மெலியவர்கள் துறைகளின் கண்புகுந்து நீராட முடியாமல் துறைகள் வேட்டு நின்றனர். வாசனைக்குழம்புகளின் வகைகளும். சந்தனச்சேறும், நெய்யும், பல்நிற மணமலர்களும் ஒன்றாக விரவிமிதந்து எங்கும் நறுநாற்றம் மிகுந்த கிளர்ப்ப வந்தது யாற்று நீர். அவ்வாறு பலவகையாக மகளிரும் இளைஞரும் பூசிக் குளிக்குங்கால் கழுவப்பட்டு வரும் வாசனைப் பொருள்களாலே கலங்கி வருந் தூய்மை இழந்த நீரைக்கண்டு, இது வேறுபட்ட நீரென வெருண்டு தம் கடன்களைச் செய்யாது

மயங்கி நின்றனர் அந்தணர். ஆற்றின் கரையில் வளர்ந்துள்ள மரங்களிற் காய்த்த காய்களும் கனிந்த கனிகளும் உதிர்ந்து மிதந்து வந்தன. சிற்சில கிழங்கு வகைகளைக் கல்லிக் கொணரவும் செய்கிறது வையை வெள்ளம்.

"சேரி இளைஞர்
செலவரு நிலையினர்
வலியர் அல்லோர்
துறைதுறை அயர
மெலியர் அல்லோர்
விருந்து புனலயரச்
சாறுஞ் சேறும்
நெய்யும் மலரும்
நாறுபு நிகழும்
யாறு வரலாறு
நாறுபு நிகழும்
யாறு கண்டழிந்து
வேறுபாடு புனலென
விரை மண்ணுக் கலிழைப்
புலம்புரி யந்தணர்
கலங்கினர் மருண்டு!

(பரிபாடல்)

சேரி - புறஞ்சேரி,
அயர-செயலறியாது நிற்க,
விருந்து புனலயர்தல்-புதுப்புனல் விளையாடல்,
சாறு-வாசனைக் குழம்பு,
சேறு-சந்தன கலவை,
நெய்-முடிபூசு தைலங்கள்,
நாறுபு-நாறி,
விரைமண்ணுக்கலிழை-வாசனைகளைக் கழுவிய புனல்

வையை வெள்ளத்தோடு மக்கள் வெள்ளமுங்கலந்து விட்டாற் பின் தண்ணீர் என்ன பாடுபடும் என்பதைக் கூறவும் வேண்டுமோ? புனலாடும் இன்பமே ஒரு தனி இன்பம். அந்த இன்பத்தை நுகர மதுரை திரண்டது. துறைதொறுங்கூடிவிட்டது திருவிழாக்

கூட்டம் நீரில் எப்படி எப்படி எல்லாம் விளையாடலாமோ அப்படி அப்படி எல்லாம் விளையாடி மகிழ்கிறது மக்கள் கூட்டம்.

சிறுசிறு பொய்கைகள் வையை யாற்றின் கரையிலே உள்ளன. அப்பெய்கைகளில் அழகிய மலர்கள் மலர்ந்துள்ளன. மலர்ந்த பூக்களோடு நீர் நிறைவு காட்டி விளங்கும் அப்பொய்கைகளில் மலர் முதலியன உள்ளாழும் படியாக வையை வெள்ளம் மேல் வந்ததென்ற ஆரவாரம் ஒருபக்கம். யாற்றிடைக் குறையிலுள்ள மணற் பரப்பில் பெண்கள் சிறு சிறு பாவைகளை மணலிற் செய்து விளையாடினர். விரைவாக வந்த புது வெள்ளத்தின் அலைகள் அவர்கள் பாவைகளைச் சிதைத்துவிட அவர்கள் இடுகின்ற கூக்குரல் ஒருபக்கம். கதிர்விடும் பருவத்திலுள்ள இளநெல் வயல்கள் ஒருபுறமும், அரியவேண்டிய காலத்தை அடைந்த சூல் முற்றிய கதிர் விளைந்த நெல்வயல் ஒரு புறமாக விளங்குகின்றன. இவைகளுள்ளே புதுவெள்ளம் புகுத்துவிட்டதென்று வேளாண் வாழ்க்கையர் எய்திய பரபரப்பு ஒரு பக்கம்.

இவைகளெல்லாவற்றுக்கும் மேலாக ஊரையே நீர் பெருகி வளைத்துவிட்டது இனித் தப்புவ்தரிது என்னும் அச்சத்திற்குரிய செய்திகள் ஒருபுறம். வானத்தில் மேகம் மூடுதலின்றித் திறந்து கொட்டத் தொடங்கியது. அதை இனி அடைக்கமுடியாது என்ற பேச்சொரு பக்கம். இப்படியாக வையையில் வந்த வெள்ளம் வெறும் வையை வெள்ளமாக மட்டும் இருக்கவில்லை-மக்களிடையே தோன்றிய ஆரவார வெள்ளத்திற்கும் காரணமாக அஃது அமைந்தது. ஓர் ஆரவாரந்தானே மற்றொரு ஆரவாரத்தைப் பிறப்பிக்க முடியும்...?

**"கவிழ்ந்த புனலில்**
**கயந்தண் கழுநீர்**
**அவிழ்ந்த மலர்மீ**
**துற்றென ஒருசார்**
**மாதர் மடநல்லார்**
**மணலின் எழுதிய**
**பாவை சிதைத்த**

தெனவழ ஒருசார்
அகவயல் இளநெல்
அரிகாற் சூடு
தொகுபுனல் பரந்தெனத்
துடிபட ஒருசார்
ஓதஞ் சுற்றிய
தூரென ஒருசார்
கார்தூம் பற்றது
வானென ஒரு சார்

(பரிபாடல்)

மாதர்-விரும்பத்தக்க, பாவை-வண்டலம் பாவை, அகவயல்-வயலி னதகத்து, அரிகாற்சூடு-அரிபருவத்து முற்றிய நெல், ஓதம்-நீரலைப் பெருக்கு, தூம்பு-அடைப்பு

வந்த வெள்ளம் நன்மை தீமை என்று பாராது பரந்து பரந்து எங்கும் பாய்கிறது. விளைநிலம், வதிநிலம், ஊர், காடு, நாடு வேறுபாட்டை அஃது எங்கே அறியப் போகின்றது? பாவை செய்து விளையாடுகின்ற பெண் அதைச் செய்வதற்கு ஆகிய நேரங்கூட ஆகவில்லை-இந்த அலை அழிப்பதற்கு. அவளுக்கு வருத்தமென்றால் வெள்ளத்திற்கு என்ன தெரியும் வருத்தம்..?

## தைந்நீராடல்

தைந்நீராடலைப் பற்றிய செய்தி பரிபாடலில் வையைப் பற்றிய பதினோராவது பாடலிற் கூறப்பெறுகிறது; இத் தைந்நீராடல் என்னும் வழக்கைப் பரிபாடல் "அம்பாவாடல்" என்று குறிப்பிடுகிறது. தை மாதத்தில் புலர்காலை நேரத்தில் கன்னிப் பருவத்து மகளிர் தம் தாய்மாரோடு வையை யாற்றுக்குச் சென்று நீராடுவர். நேரமோ நல்ல வைகறை நேரம். வையை நீரோ அளவற்ற குளிர்ச்சி உடையதாக இருக்கிறது.

நீராடப் போகுபவர்களோ பொன்னனைய திருமேனிக் கன்னியிளம் பருவ மகளிர். கன்னிப் பருவத்து மகளிர் நீராடிச் செய்யவேண்டிய சடங்குகளை செய்துகாட்டுவதற்காக முதிய பார்ப்பன மகளிர் துணை வருகின்றனர். குளித்த ஈரம் புலராத

உடையுடனே செய்ய வேண்டிய சடங்கு அது. சடங்கு முடிந்ததும் அதுவரை குளிரைப் பொறுத்துக் கொண்டிருந்த பெண்கள் தாங்க முடியாமல் பக்கத்தில் அந்தணர்கள் வளர்க்கும் வேள்வித்தீயை நோக்கிக் குளிர்காய ஓடுகின்றார்கள். பெரிய நில உலகம் முழுவதும் மழைபெய்வதாக! என்றுதான் இந்த நோன்பை இயற்றுகின்றனர் கன்னிப்பருவத்து இளமகளிர்.

"வெம்ப தாக
வியனில வரைப்பென
அம்பா வாடலி
னாய்தொடிக் கன்னியர்
முனித்துறை முதல்வியர்
முறைமை காட்டப்
பனிப்புலர் பாடிப்
பருமண லருவியின்
ஊதை யூர்தர
வுறை சிறை வேதியர்
நெறி நிமிர நுடங்கழல்
பேணிய சிறப்பிற்
றையல் மகளிர்
ஈரணி புலர்த்தர
வையை நினக்கு
மடைவாய்த் தன்று

(பரிபாடல்)

வெம்பாதாக-வெப்பமெய்தாது மழைபெய்வதாக, வியன்-மிகப்பரந்த, அம்பா-தாய், முனித்துறை முதல்வியர்-முதுபார்ப்பனியர், ஊதை-குளிர்ந்த வாடைக்காற்று, மடை-சமைத்த பொருள்கள், வாய்த்தன்று-வாய்த்தது.

கன்னியர் தந்தாயரோடு சென்று நீராடுவதால் இதற்கு "அம்பாவாடல்" என்று பெயர் வந்தது. தைந் நீராடலாக இருந்து வந்த இவ்வழக்கு இக்காலத்தில் மார்கழி நீராடலென மார்கழித் திங்கள் நிறைமதி நாளில் புலர் விடியற்போதில் நிகழலாயிற்று. மாணிக்க வாசகர். ஆண்டாள் முதலிய அடியவர்களும் மார்கழி நீராடலென்றே கொண்டு திருவெம்பாவை, திருப்பாவை

பாடினார், மார்கழி, தை ஆகிய இரண்டு திங்களிலுமே காலை நேரத்து நீரில் ஒரு தெய்வீக ஆற்றல் இருக்கச் செய்கிறது. ஓடும் நீரானால் அவ்வாற்றல் இன்னும் மிகுதியாகிறது.

## பூம்புனல் யாறு

வையை யாற்றின் இருகரைகளிலும் பூத்துக் குலுங்கித் திசைகளெல்லாம் புதுமணம் பரப்பும் மலர்ச்சோலைகள் விளங்குகின்றன. மலர்களில்தான் எத்தனை வகைகள்? வெள்ளை நிறமும் வீறியெழும் நறுமணமும் உடைய மல்லிகை. கன்னிப் பெண்ணின் சிறு முறுவல் போல் ஒளிவிடு முல்லை. சண்பகம், அல்லி, கழுநீர், தாமரை, மகிழம்பூ, குருக்கத்திப்பூ, பாதிரிப்பூ, சுரபுன்னைப்பூ, புன்னாகம் முதலிய பலவகை மலர்கள் இருகரையிலும் இலங்கி மணம் மிகுக்கின்றன. அப்பூக்களுட் சில வையையாற்றின் தெளிந்த நீர்ப்பரப்பில் உதிர்ந்து மிதக்கின்றன. "புனல்யாறு அன்றிது-பூம்புனல்யாறு" என்ற இளங்கோவடிகள் வாக்கு இங்கே மெய்ப்படுகின்றது. வையையாற்று நீர் மாலையில் கண்ணாடிபோல் ஒளியும் தெளிவும் பெற்று விளங்கும். காலையில் சிவந்த குருதிபோற் கலக்கமெய்தி விளங்கும். தெளிந்து விளங்கும்போது வானுலகத்தைத் தன்னுக்குள்ளே விளக்கக் காட்டும்படியான ஆடிவளையம் போல அது பேரொளி பிறங்கும் பாறைப் பகுதிகளில் பரந்த இடங்களில் நிலைபெற்று வான வளையத்தைத் தனக்குள் அடக்கிக் காட்டுகிறாள் வையைத்தாய்

"மல்லிகை மௌவல்
மணங்கமிழ் சண்பகம்
அல்லி கழுநீ
ரரவிந்த மாம்பல்
குல்லை வகுளங்
குருக்கத்தி பாதிரி
நல்லிணர் நாக
நறவஞ் சுரபுன்னை
எல்லா கமழு
மிருசார் கரை கலிழத்
தேறித் தெளிந்து

செறியிருண் மான்மாலைப்
பாறைப் பரப்பிற்
பரந்த சிறைநின்று
துறக்கத் தெழிலைத்தன்
னீர் நிழற் காட்டும்
காரடு காலைக்
கலிழ்செங் குருதித்தே
போரடு தானை யான்யாறு".

(பரிபாடல்)

மௌவல்-முல்லை, கழுநீர்-குவளை, அரவிந்தம்-தாமரை, குல்லை-துளசி, வகுளம்-மகிழ மலர், கலிழ-உதிர, மால்மாலை-மயக்கத்தைத் தரும் மாலை, சிறை-பக்கம், துறக்கம்-வானுலகு, எழில்-அழகு, கார்-இருள், காரடு காலை-வைகறை, போரடுதானையான்-பாண்டியன்.

துறக்கத்தின் எழிலைத் தந்நீர் நிழலின் கண் காட்டுமென்பது மேக மண்டலத்தோடு கூடிய புறவானத்தைக் காட்டுமென்னும் பொதுப் பொருளையுடையது ஆயினும், வையையாற்றின் பனி தத்துவத்திற்கும் இவ்வடிகளே விளக்கம் தருகின்றன. தன்நீரின் நிழலிலேயே துறக்கத்தின் சாயை யைக்காட்டும் என்றால் நீராடற் பயன் கூற வேண்டியதே இல்லை. "தெய்வீக" மென்பது இயற்கையின் அகடிதகெடித சர்வ - வியாபக- ஸ்வரூபமே என்பது. நமது முன்னோர் முடிவு. அதுதான் நதிக்கும் "தெய்வீ"கம் தந்த மரபாகும்.

## தென்னவன் திருநகரச் சிறப்பு

அன்றும் சரி இன்றும் சரி தமிழ்நாட்டின் தலைநகராகக்-கலைநகராக விளங்குகின்ற பெருமை மதுரைக்கு உண்டு. கூடல், மதுரை என்பன அதன் தொன்று தொட்டு வந்தவழக்குடைய பழம்பெயர். ஆலவாய் என்பது இறைவனடியார் பாடல்களில் இடுகின்ற பெருமை பொருந்திய தெய்வீக முறையில் வந்த பெயர். இம்மதுரைக்குரிய பரி பாடல்கள் நான்கு என்று முன்பே சொன்னோம். அந்நான்குமே இப்போது கிடையாவாயினும் அவைகளின் உறுப்புக்களாகிய சில பாடல்கள் உள்ளன.

அப்பாடல்களில் மதுரை நகரின் மாண்பு ஈடும் எடுப்பும் அற்ற முறையிலே கூறப்படுகிறது. "புலவர்களுடைய அறிவாகிய துலாக்கோலின் தட்டுக்களில் ஒன்றில் உலகம் முழுவதையும் இருத்திப் பிறிதொன்றில் பாண்டியனது மதுரையையும் இருத்துவோமானால் உலகின் நிறைகுறையுமேயன்றி மதுரையின் நிறை குறையாது" என்று அறுதியிட்டு உறுதியாகக் கூறுகிறது. பரிபாடல்.

"உலகம் ஒரு நிறையாத்தானோர் நிறையாப்
புலவர் புலக்கோலால் தூக்க–உலகெலாம்
தான்வாட வாடாத தன்மைத்தே தென்னவன்
நான்மாடக் கூடல் நகர்".

–பரிபாடல்
மதுரைத்திரட்டு.

புலக்கோல்–அறிவுத்தராசு, வாட–குறையா, நான்மாடம்–நான்கு மாடங்களாற் சிறந்த.

இதுமட்டுமல்ல வாழ்வென்றாலே மதுரையில் வாழும் வாழ்வும் செவ்வேள் திருக்கோயில் கொண்டிருக்கும் பரங்குன்றில் வாழும் வாழ்வும்தான் என்கிறது பரிபாடல். வீடுபேறு கிடைப்பதற்குத் தகுதியுடையவர்கள் இவ்விருவர்தாம் என்பதும் பரிபாடற் கருத்தே. இவைகளில் வாழ்பவர்கள்தாம் வாழ்பவர்களாகக் கூறப்படுகிறார்கள். அத்துணைச் சிறந்த வாழ்வு.

"ஈவாரைக் கொண்டாடி
ஏற்பாரைப் பார்த்துவக்கும்
சேய்மாடக் கூடலும்
செவ்வேள் பரங்குன்றும்
வாழ்வாரே வாழ்வா
ரெனப்படுவார் மற்றையார்
போவாரார் புத்தேளுலகு"

–பரிபாடல்
மதுரைத்திரட்டு

சேய்மாடம்-உயர்ந்த மாடம், செவ்வேள்-முருகப்பெருமான், பரங்குன்று-திருப்பரங்குன்று, புத்தேளுலகு-வானுலகம்.

மதுரையைச் சிறப்பிக்கும்போது ஈவாரைப் பாராட்டி ஏற்பார். மகிழ்ச்சியைக் கண்டு தாம் மகிழும் சிந்தை படைத்த மக்கள் வாழும் மதுரை என்று அறத்தின் நாகரிகப் பண்பை விளக்குகிறார் பாடிய ஆசிரியர். எனப்படுவார் என்பது என்று சிறப்பிக்கப்படுவார் என்னும் பொருள் நயத்தை உட்கொண்டு விளக்கும் இயல்பினையுடையது.

## நகரின் அமைப்பு

அமைப்பு முறையிலே அழகிற் சிறந்தவை என்று உலக நகர்களுள்ளே தேர்ந்தெடுத்தால் முதல் இடம் செந்தமிழ்த் திருப்பதியாம் மதுரை நகர்க்கே உரியதாகும். ஆயிரம் இதழ்களை விரித்துத் திகழும் அரவிந்த நாள் மலர்போல விளங்குகிறது மதுரை நகரம். நடுவில் அகண்டாகாரமான பரிபூரண சோலையுடன் விளங்கும் திருக்கோயிலும். திருக்கோயிலை நடுப்புள்ளியாகக் கொண்டு ஆரம் ஆரமாக விளங்குகின்ற சிறியவும் பெரியவுமாகிய வீதிகளும் பார்த்து மகிழும் அமைப்பின.

மதுரையின் அமைப்பை ஆயிரவிதழ்த் தாமரையினும் அதிக இதழ்களையுடைய ஒரு தாமரைக்குத்தான் ஒப்பிடுதல் வேண்டும். எத்துணையோ பல தெருக்கள், கவர்வழிகள், முடுக்குகள், வீதிகளெனப் படும் பதினாறு பெருந்தெருக்கள், ஆகிய இதழ்களும், சிற்றிதழ்களும் ஒரு தாமரையாக அன்றோ அது இருக்க வேண்டும்? இன்று இன்னும் பல சிற்றூர்களும், பேரூர்களும் மதுரைக்கு அண்மையிலே தோன்றி நகரின் அமைப்பைப் பலவகையிலும் விரிவுபடுத்திக் கொண்டிருக்கின்றன. நகரவை கார்ப்பரேஷனாக (Corporation) மாற வேண்டிய அளவு மதுரை நகரின் தரம் உயர்ந்து கொண்டே போகிறது.

இதுவரை காட்டிய கருத்துக்களும் படமும் நமது சொந்தக் கற்பனைகள் அல்ல. பரிபாடலில் மதுரைநகரம் ஒரு அழகிய தாமரை மலராகவே உருவகம் செய்யப் பெறுகிறது. "பூவின் இதழ்களைப் போலத் தெருக்கள் அமையப் பெற்றுள்ளன.

இதழ்களுக்கு நடுவே இருக்கக்கூடிய பொகுட்டைப் போல அமைந்துள்ளது அண்ணல் இறைவனின் ஆலயம். தாமரைப் பொகுட்டிலே தேனுள்ளது போலத்தான் மதுரையில் தமிழ்க்குடிகள் வாழ்ந்து வந்தன.

அத்தேனை நாடி ரீங்காரம் செய்து கொண்டு வரும் வண்டினைப் போலப் பரிசிலை நாடிப் பாடி வருகின்றனர் பரிசில் வாழ்நராகிய குடியினர்.

மறை முதுகிழவன் உரைசெய்த பழமறைகளை வைகறைப் பொழுதிலே அந்தணர்கள் ஓதுகையினாலே அக்குரலைக் கேட்டு ஊர் துயிலெழுதலல்லது, சேரன் தலைநகராகிய வஞ்சியையும் சோழன் தலைநகராகிய உறையூரையும் போலக் கோழிகூவும் குரலைக் கேட்டுத் துயில் எழுதலை உடையது அல்ல இம்மதுரைத் திருநகர்!

“மாயோன் கொப்பூழ்
மலர்ந்த தாமரைப்
பூவொடு புரையுஞ்
சீறார் பூவின்
இதழகத் தனைய
தெருவ மிதழகத்
தரும்பொகுட் டணைத்தே
யண்ணல் கோயில்
தாதின் அனையர்
தண்டமிழ்க் குடிகள்
தாதுண் பறவை யனையர்
பரிசில் வாழ்நர்
பூவினுட் பிறந்தோன்
நாவினுட் பிறந்த
நான்மறைக் கேள்வி
நவில்குரல் எடுப்ப
ஏம இன்துயில்
எழுதல் அல்லதை
வாழிய வஞ்சியுங்
கோழியும் போலக்
கோழியின் எழாதெம்

*பேரூர் துயிலே!"*

*(பரிபாடல் – மதுரை)*

*மாயோன்-திருமால், புரையும்-ஒக்கும், அண்ணல்-இறைவன், தாது-தேன், பறவை-வண்டு, பூவினுட் பிறந்தோன்-பிரமதேவன் ஏம இன்துயில்-களிப்பு மிக்க இனிய தூக்கம், வஞ்சி-சேரர் தலைநகர், கோழி-சோழர் தலைநகராகிய உறையூர், பேரூர்-பெரிய ஊராகிய மதுரை.*

என்று இந்த வியக்கத்தக்க நகரின் அமைப்பை வரைந்து காட்டுகிறது பரிபாடல். இன்றும் இவ்வமைப்பு மதுரை நகரைப் பொறுத்தவரையில் பெரும்பாலும் சிதைவு எய்திவிடவில்லை. ஊருக்கு நடுவில் உத்தமன் கோயிலும் தமிழ்க்குடி மக்கள் வாழும் தலைமை வீதிகளும் பிறவும் எல்லாம் முறையாகவே அமைந்திருக்கின்றன. அன்று புலர் விடியலில் கேட்ட மறையொலி இன்று கேட்கவில்லை. அன்று நான்மறை ஓதிய வாய்கள் இன்று வேறு துறைகளில் வேலை செய்யப் புகுந்து விட்டன! வேறுபாடு இந்தச் சிறிய அளவு தானுண்டு.

## திருமகள் நெற்றியில் ஒரு திலகம்!

தமிழை வேலியாகக் கொண்ட தமிழ் நாட்டினுள்ளே எங்கும் புகழ் மணம் பரப்புவதாகப் பொலிவு எய்துவதின்றி மதுரை நகரின் மாண்பு குன்றுவது என்றும் இல்லை. தெய்வத் திருப்பரங்குன்றம் நிலைத்து நிற்கின்ற வரையில், செவ்வேள் திருவருள் வாழ்வோர்க்கு உள்ள வரையில் மதுரை மாண்பிற் குறையாத பதியாக வாழ்ந்தே தீரும்.

*"தண்டமிழ் வேலித்*
*தமிழ் நாட்டகமெல்லாம்*
*நின்று நிலை இப்*
*புகழ்பூத்தலல்லது*
*குன்றுத லுண்டோ?*
*மதுரை கொடித்தேரான்*
*குன்ற முண்டாகு மளவு"*

*(பரிபாடல்–மதுரை)*

தமிழ்வேலி-தமிழாகிய வேலி, நிலைஇ-நிலைத்து, கொடித்தேரான்-முருகக்கடவுள், குன்றம்-திருப்பரங்குன்று.

திருமகள் நெற்றியில் ஒரு திலகம் போல விளங்குகிறது கூடற்றிரு நகர். பாண்டியன் திருநகரிற் பரந்து ஓடும் வையைத் தெய்வமாகிய வளநதி உள்ள வரையில் மதுரையின் புகழ் குன்றப் போவதில்லை. உலகில் தனியொரு பெருநகராய் விளங்கிப் புகழ்பூத்தே வாழும் இம்மதுரை.

"செய்யாட் கிழைத்த
திலகம் போற் சீர்க்கொப்ப
வையம் விளங்கிப்
புகழ் பூத்தலல்லது
பொய்யாத லுண்டோ
மதுரை புனைதேரான்
வையை யுண்டாகு மளவு"

(பரிபாடல்-மதுரை)

செய்யாள்-திருமகள், சீர்க்கொப்ப-புகழ்க்குப் பொருந்த வையம்-உலகில், புனைதேரான்-பாண்டியன்.

## முடிவுரை

"பரிபாடல்" என்ற பெருநூலின் ஒளிரும் கடவுள், இயற்கை, நகர் மாட்சி ஆகிய மூவகைக் கவின்சான்ற காட்சிகளை எளியநடையில் இதுகாணும் விவரித்தோம். இக்காட்சிகளால் தமிழ் இலக்கியத்துறை முற்றிய புலமை வாணர்க்குப் பெரும் பயன் இன்றெனினும் ஏனையோக்கு இலக்கிய நுகர்ச்சிக்குரிய தகுதியை ஆவது இவை தாராமற் போகா. இம்முறையில் வாய்ப்பு நேருமாயின் ஏனையவற்றையும் ஓரளவு எழுத வேண்டு மென்னும் அவா உண்டு. கடவுளைப் 'பற்றிய உயர்ந்த சித்தாந்தங்களை இந்நூற்காட்சிகளில் நாம் கண்டது போலப் பயன் தரும் காட்சிகள் வேறுசில நூல்களிலும் உள்ளன. அவற்றையும் இம்மாதிரித் துறையில் ஒரு பொழுது எழுதும் ஆசை இருக்கிறது, வாய்ப்பை ந்ல்கி இறைவன் அருள் புரிவானாக!

## சுந்தர காண்டப் பெயர் விளக்கம்

### கம்பன் செளந்தரியக் கலை

### (தோற்றுவாய்)

காப்பியத்தின் செளந்தரிய நிலை அதன் நடுமையமாக அமையும்; நிகழ்ச்சிகளைப் பொறுத்து அமையும். காப்பியக்கலையின் நுணுக்கங்களையும் ஏற்ற இறக்க உணர்ச்சித் தரங்களின் வரம்புக்கு உட்பட்ட போக்கையும் நன்கு உணர்ந்த மகாகவி அந்த நிகழ்ச்சிகளில் செளந்தரிய அமைப்புச் செறிய வைத்துக் காட்டுவான்.

காப்பிய நேயர்கள் முற்றிலும் தம்மை மறந்து ஈடுபடத்தக்க அம்சங்கள் அப்போது பூரணமாக இருக்கும். இராமாயணத்தைப் பொறுத்தமட்டில் சுந்தரகாண்டம் அத்தகைய செளந்தரியக் கலைக் களஞ்சியமாக விளங்கும் தகுதியைத் தனக்கே உரியதாகப் பெற்றுக் கொண்டுவிடுகிறது. இராமாவதாரக் கதையின் பாவிகக் கருத்து (Central idea of the Epic) சுந்தரகாண்டத்தில்தான் வந்து சேர்கின்றது. சுந்தரகாண்டத்திற்கு உள்ள இந்தத் தன்னிகரற்ற தனிச்சிறப்பு கம்பனுடைய செளந்தரிய சாகசத்தால் பன்மடங்கு ஒளிபெற்று விளங்குகிறது. மற்றொரு செய்தி பொதுவாக இங்கே காரணம் ஆராய்வதற்கு ஏற்றதாகிறது. அயோத்தியில் நிகழும் நிகழ்ச்சிகளைக் கூறும் காவியப் பகுதிக்கு அயோத்தியாகாண்டம் என்று பெயர். அதே மாதிரியே, ஆரணியகாண்டம், கிஷ்கிந்தா காண்டம் என்ற பெயர்களும் ஏற்பட்டன. இந்த முறைப்படி பார்த்தால் இலங்கையில் நடைபெறும் நிகழ்ச்சிகளையே பெரும்பாலும் கூறும் இக்காண்டத்திற்கு “இலங்கா காண்டம்” என்பது போன்ற ஓர் பெயரல்லவா பொருத்தமாக வழங்கப்பட்டிருக்க வேண்டும்?

கம்பனும் வால்மீகியும் சுந்தர காண்டம் என்றே பெயரை அமைத்துக் கொண்டது ஏன்? கூறப்படும் நிகழ்ச்சியை ஒட்டிப் பெயரை அமைக்காமல் நிகழ்ச்சியின் செளந்தரியப் போக்குக்கு ஏற்பப் பெயரிட்டுக் கொள்வானேன்? செளந்தரியம் இருப்பதனால் பெயரிட்டனர் என்றால் ஏனைக்காண்டங்களில் அந்த செளந்தரியம் இல்லாமற் போய்விட்டது என்று பொருளா? இதனைச் சற்றே விரித்து விளக்கல் வேண்டும். காவியநாயகனிடமிருந்து பிரிக்கப்பட்ட நாயகி அந்தப் பிரிவினாலே அடையக் கூடிய கலக்கத்தில் சோகபாவத்தோடு

கூடிய சிருங்கார மென்மை அமைந்திருக்கிறது. மனத்தை உருக்கும் நிலையில் பிரிவுழிக் கலங்கள் என்னும் இந்தச் சுவையைப் பிராட்டியின்பால் விளங்குவதாக அமைத்துச் காட்டும் சௌந்தரியம் இக்காண்டத்தில் உள்ளமையால் இது சுந்தரகாண்டமாயிற்று என்பர்.

இது விப்பிரலம்ப சிருங்காரம் எனப்படும். இஃது ஒருவகையால் ஏற்கும் காரணமேயாகும். இனி, அனுமன் தூது மூலமாக இராமனின் சௌந்தரியங்களைச் சீதையும், சீதையின் கற்புநிலை பிறழாத மனத்திண்மையாகிய சௌந்தரியத்தை இராமனும் அறிந்து கொள்கையினால் சுந்தரகாண்டமாயிற்று என்றும் ஓர் அழகான அமைதி கூறலாம். உருக்காட்டு படலம் முதலிய படலங்களில் தேவியைக்கண்டு அனுமன் இராமபிரானின் சுகசௌகரிய நிலைகளை விவரிப்பதும், திருவடி தொழுத படலத்தில் தேவியின் மனம்பிறழாத தூய்மையை இராமனுக்கு உரைப்பதும், இக்காண்டத்தில் இடம் பெறுகின்றமை இங்கே சிந்திக்கத்தக்கது.

பேண நோற் றனுமனைப்
பிறவி பெண்மை போல்
நாணம் நோற் றுயர்ந்தது
நங்கை தோன்றலான்
மாணநோற் றீண்டிவள்
இருந்தவா றெலாங்
கரண நோற்றிவனவன்
கமலக் கண்களால்

(காட்சிப்படலம்–73)

நோற்றல்-தவம்செய்தல் கமலக்கண்-தாமரைப் போலும் கண்கள்.

என்று அனுமன் சீதையின் பதிவிரதா சக்தியை - அதன் மகாசௌந்தரியத்தைத் தான்கண்டு, இராமன் காணவில்லையே என்று மனம் நோவதாகக் கம்பன் கூறும் பாட்டில் இக்கருத்து உட்பொதிந்து தோன்றுகின்றது. “இராமாயணம் சிறையிருந்தாள் ஏற்றம் கூறும்” என்ற வைணவ வியாக்கியான கர்த்தாவும் சீதையின் பெருத்த புகழுக்கும் இக்காண்டத்தின் சிறப்புக்குமே சான்றாகின்றார். அனுமனுக்குச் சுந்தரனென்று பெயருண்டு. அவன் முக்கியனாக நின்று நிகழ்த்தும் காண்டமாதலால் இது

சுந்தரகாண்டமானது என்றும் ஒரு சாரார் கூறுவர். இதைப் போலவே "மற்றைப் பகுதிகளினும் சௌந்தரியம் பெரிதும் மிகுந்து செறிந்திருக்கிறதா கையினால் சுந்தரகாண்டமாயிற்று, என்ற பிரிதோர் காரணத்தைப் பிரிதோர் சாரார் மொத்தமாகக் கூறிவிடுகின்றனர்.

வட்டத்திற்கு நடுப்புள்ளி போல் இராமாவதாரத்தின் காரணம் சுந்தரகாண்டத்தில்தான் இருக்கிறது என்ற பேருண்மையை நேரடியாக விளக்குவதாக இருக்கவேண்டும் இப்பெயருக்குக் கூறுகின்ற காரணம். "காவியத்தின் பாவிகம் முற்றிலும் மலர்ந்து முழுமணம் பரப்புவது இக்காண்டத்திலேதான், என்னும் உட்கிடக்கையினாலேயே இரண்டு மகாகவிகளும் இவ்வாறு பெயரிட்டனர் என்று கூறினால் இதுவரை கூறிய காரணங்களும் இக்கூற்றின் சிற்றங்கங்களாக அமைந்து உள்ளடங்கிப் போகும். "சீதையின் சிறைப்பாடு" இராமாயணக்கதையானது போல் "ஹெலனின்" சிறைப்பாடு "இலிக்கயாதா"கியது. ஹோமரின் அந்த மகாகாவியத்தின் சூத்திரப்பொருள் தெளியும் மேல்நாட்டு விமர்சகர்கள் இவ்வாறே தெளிந்துரைப்பர். காவியத்தை அலங்கரிக்கும் பொதுவான குணம் ஒன்று அவசியம் இருக்க வேண்டும். அதைக் காவியத்தின் அழகையெல்லாம் விளக்கும் மூல சௌந்தரியம் என்று கூறுவதில் யாருக்கும் ஆட்சேபனை இருக்கமுடியாது.

அந்த சௌந்தரியத்தை அலங்காரநூலார் பாவிகம் என்று கூறுகின்றனர். பாவிகத்தைக் காவியத்தின் முழுமுதல் அலங்கார குணமாகக் கொள்வது என்ற முறைப்படி சுந்தரகாண்டம் என்ற பெயர் இதே காரணத்தைப் பொருத்தமாக ஏற்றுச் சிறக்கின்றது. சுந்தரம் என்றால் "மங்களகரமான அழகு" என்று பொருள். காண்டம் என்பதற்குச் சேர்க்கை, இயைபு, கூட்டம், தொகுதி என்பன பொருள்கள். பாவிகத்தன்மை பொதிந்திருப்பதனால் "கடலைத் தாவிக் கற்பின் செல்வியைக் கண்டு கணையாழி கொடுத்தபின் மீண்டு திருவடியைத் தொழுகின்றவரை" இக்காண்டமெங்கும் இடையறவின்றிச் சௌந்தரியம் பின்னிக் கிடக்க வேண்டும். காண்டமென்பதற்குச் செய்யுட்களின் கூட்டம் என்று மட்டும் பொருள் பெற்று அமைந்துவிடுவோமானால் மேற்கூறிய நயத்திற்கு இடமின்றிப் போகும்.

"கடல் தாவும் எழுவாய் தொடங்கித் திருவடிதொழும் இறுவாய்காறும் அழகு அணு அணுவாகத் செறிந்திருக்கிறது சுந்தரகாண்டம் என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர். அப்படி ஒப்புக் கொள்ளவேண்டுமானால் அதனை வலியுறுத்தி வகைசெய்து காட்டத் தகுந்தவாறு இக்காண்டத்தின் பெயர்ப் பொருள் இருக்க வேண்டும் என்பது இன்றியமையாதது. கம்பனைப் பொறுத்தமட்டில் சுந்தரகாண்டத்தின் பதினைந்து பாடல்களையும் முழுக்க முழுக்கப் பதினைந்து அழகுக் களஞ்சியமாகவே கட்டியிருக்கிறான். சௌந்தரியக்கலையின் அதியற்புதமான நுண்ணிய வேலைப்பாடுகளைக் கவிச்சக்ரவர்த்தியின் இக்காண்டத்தில் ஆதியிலிருந்து அந்தம் வரை அணிபெறச் சமைத்திருப்பதைக் காணலாம். இன்னொரு நயம் என்னவென்றால் முந்தினகாண்டத்தில் உற்பத்தியும் வருகிற காண்டத்தில் சங்கமமும் பின்னிக் கிடக்குமாறு தோன்றும் ஓர் எழில் நதிபோன்ற இயற்கையான சந்தர்ப்ப அமைதியும் இக்காண்டத்திற்கு இருக்கிறது. இவைகளையெல்லாம் கம்பன் கவிதைத் துணைகொண்டு சுருங்கிய அளவில் விமர்சித்துக் காட்டுவதே இத்தொடரின் நோக்கம்.

## கடல் கடந்த காதல்

இராமபிரானுடைய பூரண பக்தனாகிய அனுமன் அவனிடம் தனக்குள்ள பக்தியாகிய காதலை எத்துணையோ அருஞ்செயல்களால் நிதரிசனமாக்கிக் காட்டுகிறான். அந்தகைய செயல்களில் தலை சிறந்தது கடல்கடந்து செய்யும் இந்தக்காரியம், திருவாளர் பி.ஸ்ரீ அவர்கள் கூறுவது போலக் கடல்தாவும் சாகஸத்தை ஒரு பெரிய கலையாகவே படைத்துக் காட்டியிருக்கிறான் கம்பன்.

பரம்பொருளின் மனிதத் தோற்றமாகிய இராமனிடம் அனுமன் கொண்டிருந்த ஆன்ம உறவாகிய பக்திக்காதலின் அதியற்புத சக்தியைக் கடல்கடந்து செய்யும் இந்தத் திருப்பணியினால் கம்பன் விளக்க முற்படுகிறான். கடலைத் தாவுவது சாதாரணச் செயலல்ல. புலன்களை அடக்கி மானத்தை ஒருநிலைப்படுத்தி ஏகாக்கிர சித்தனாகத் திகழ்ந்த திறனும் எம்பெருமானிடத்தில் அனுமனுக்கு இருந்த அசைக்க முடியாத உயிர்க்காதலுமே இந்த அரிய பெரிய கருமத்தை எளிதிற் செய்ய

உதவியிருக்க வேண்டும். சுந்தரகாண்டத்தின் முதற்படலமாகக் கம்பன்கடல் தாவுபடலத்தை அமைத்துக் கொண்டிருக்கிறான். கடலைக் கடந்து முடித்தவுடன் அனுமன் எத்தகைய திருப்தி பெற்றிருப்பானோ அதே திருப்தியைச் சுந்தரகாண்டத்தைப் படித்து முடித்தபின் காவியரஸிகர்களும் பெற்று விடலாம். அற்புதத்திலும் அதிசயத்திலும் பிரம்மிக்கத் தக்க ஒருவகை அழகு இருக்கிறது. அந்த அழகைச் சுவைத்து மனமகிழ்வது ஒரு தனிப்பட்ட இன்பம்.

"நாலினோடு உலகம்மூன்றும்
நடுக்குற அடுக்கிநாகர்
மேலின் மேல் நின்றகாறுஞ்
சென்றகூலத்தின்விண்டு
காலினால் அளந்த வான
முகட்டையுங் கடக்கக் கால
வாலினால் அளந்தான் ! என்று
வானவர் மருளச் சென்றான்!!
(கடல்தாவுபடலம்-33)

கூலம்-பரப்பு, விண்டு-திருமால், மருள-மயங்க.

என்று அந்த அற்புதத்தின் அழகைக் கம்பன் தன் சொந்தச் சாதுரிய அழகுடன் சேர்த்து அளிக்கிறான் ஏறக்குறையத் தொண்ணூறு பாடல்களுக்கும் அதிகமாகவே கடல்கடந்த பக்திக்காதல் வருணிக்கப்படுகிறது. பிரம்மாண்டமான ஒரு திருப்பணியை எவ்வளவு கவிதாவேகத்துடன் பாடவேண்டுமோ அவ்வளவு வேகமும் அழகு கெடாத கவிச்சுவையும் கம்பனின் கடல்தாவுபடலத்தில் குறைவற நிறைந்திருக்கிறது. கடல்தாவும் நிகழ்ச்சியை அனுமன் வானத்தில் கடலுக்குமேல் தாவி எழுந்தது முதல் இலங்கையை அடையும் வரை வனப்பு வரையறை பிறழாமல் அசாதாரணமான கற்பனைகளாலும் வருணனைகளாலும் பேசிச் செல்வதினால் "சுந்தரகாண்டம்" என்ற பெயரை இந்தமுதற் படலமும் ஒருவகையால் விளக்க ஏற்றதாகவே பாடப்பட்டிருக்கிறது. இப்படியே இதனைப் பதினைந்து படலங்களிலும் அமைந்திருக்கக் காணலாம் அப்போதுதான் இந்தக்காண்டம் முழுவதுமே சௌந்தரியச் சேர்க்கை என்ற நுணுக்கமான உண்மை புலப்படும்.

## அழகுத் திருநகரில் அனுமன் !

கடலைக் கடந்தபின் இலங்கையை அடைகிறான் அனுமன். அவன் இலங்கையைச் சுற்றிக் கண்டு கொண்டே சீதையைத் தேடும் பகுதிக்கு "ஊர்தேடு படலம்" என்பது கம்பன் இட்ட பெயர். ஊரில் சீதையைத் தேடும் படலம் என்பது இதன் விரிபொருள். நஞ்சு பொருந்திய நல்லபாம்பைக் கல்லிலே செதுக்கினாலும் சிற்பி அதனை இலட்சணம் குறையாமல் தானே செதுக்க வேண்டும்? இராவணன் வசிக்கும் நகரமானாலும் கவி தன் வருணனையைச் செய்தலில் தவறிவிடக்கூடாதே? இலங்கை ஓர் அழகுத்திருநகர் என்ற முறையிலேயே கம்பனுடைய பாடல்கள் பேசுகின்றன. ஏறக்குறைய இருநூற்றிருபது பாடல்களைக் கொண்ட ஊர்தேடு படலம் இக்காண்டத்திலேயே மிகப் பெரிய படலங்களுள் ஒன்று. இதில் மிகப் பெரும்பான்மையான பாடல்கள் இலங்காபுரியின் சௌந்தரிய வருணனைக்கே செலவிடப்படுகின்றன. இப்படலத்தில் சந்திரோதய வருணனை சிறுபான்மை வருவதைக் கொண்டு சிலபிரதிகளில் "நிலாத் தோற்று படலம்" என்று பெயரெழுதியுள்ளனர். இன்னும் இலங்காதேவி தேவிபடலம், இலங்கை மாதேவிபடலம், இலங்கைமாதேவி வதைப்படலம் என்றும் பெயர்கள் பிரதிகளில் காணப்படுகின்றன. அவையாவும், "ஊர்தேடுபடலம்" என்னும் பெயரைப் போல்பெருந்துவனவாகா. நிலாத்தோற்றத்தின் அழகு கவியால் புனைந்துரைக்கப்படும் இடத்தில் தனிவனப்பைக் கண்டு அப்பெயர் எழுந்தது போலும்.

"பொன் கொண்டிழைத்து
 மணியைக் கொடு பொதிந்த
மின்கொண்டிழைத்த
 வெயிலைக் கொடுசமைத்த
என்கொண்டியற்றிய
 எனத்தெரிகிலாத
வன்கொண்டல் தாவி
 மதிமுட்டுவன மாடம்"

(ஊர்தேடுபடலம்)

கொடு-கொண்டு, கொண்டல்-மேகம், மதி-சந்திரன்

என்று இப்படலத்தின் ஆரம்பமே அழகு வருணனையில் உதயமாகிறது. கும்பகர்ணன், இந்திரசித்து, விபீடணன், முதலியோரை அனுமன்கண்டு செல்வதாகவும், இலங்கைநகரின் வீதிகள் தோறும் செல்வம் கொழிக்கும் போகப் பெருவாழ்வு காண்பதாகவும், இலங்கை மாதேவியோடு விவாதித்துப் போரிட்டு செல்வதாகவும், வரும் இப்படலத்தின் சம்பவங்களிலும் சௌந்தரியமும் கவிதையின் மாதுரியமும் மிகுந்தே காணப்படுகிறது. இப்படலத்துள் சீதையைத் தேடுவதிலும் இலங்கை நகரின் வளமிக்க எழிலையே அனுமன் மிகுதியாகத் தேடிக் காண்பதாகக் கம்பன் இப்படலத்தை அமைத்துள்ளான்.

> "புள்ளுறை உய்யானத்தை
> உறநோக்கி அயல்போவான்
> கள்ளுறையும் மலர்ச்சோலை
> அயலென்று கண்ணுற்றான்" (234)

என்று இப்படலத்தின் இறுதியில்தான் அனுமன் அசோக வனத்தைக் கண்ட செய்தியே கூறப்படுகிறது. எனவே, சுந்தரகாண்டம் என்னும் காண்டப்பெயருக்கு ஏற்ப இரண்டாவது படலாமாகிய ஊர்தேடு படலமும் அழகுநிலைச் செறிவைப் பெற்றே அமைந்திருக்கிறது. இனி அனுமான் சீதையைக் காணும் காட்சியிலுள்ள எழிலைக் காண முற்படுவோம்.

## சோகத்தின் நடுவே கண்ட தெய்வீக வனப்பு

### நயனங்கள் செய்த நற்றவம் ............!

காட்சிப் படலத்தை ஓவியம் போலச் சமைத்திருக்கும் கம்பன் திறத்தினால் சீதாபிராட்டியின் தெய்வீக தரிசனத்தைச் சோகத்தின் நடுவே கண்ட அனுமனின் நயனங்கள் மட்டுமல்ல கம்பனைச் சுவைக்கும் ஒவ்வொருவருடைய நயனங்களும் நல்லதவம் செய்திருக்க வேண்டும் என்றுதான் தோன்றுகின்றது. முதலாவதாகப் பெரும் பிரிவு நிலையில் பிராட்டியின் துயரமே உருவமான தோற்றம் ஒருபெரும் தெய்வீக வனப்புடன் விளங்கக்

காண்கிறோம். நல்லவர்கட்கு வரும் துன்பத்தை அவர்கள் புன்சிரிப்போடு பொறுத்துக்கொள்வதில் ஏதோ பக்திக்குரிய அழகு ஒன்று இருக்கிறதல்லவா? அதே அழகு இங்கே தேவியின் பிரிவுத் தோற்றத்திலும் நிகழ்கிறது அந்த அழகு எல்லையற்ற பரப்புடையது.

துப்பினாற் செய்த கையொடு
கால்பெற்ற துளிமஞ்சு
ஒப்பினான்தனை நினைதொறுங்
நெடுங்கண்கள் உகுத்த
அப்பினால் நனைந்து அருந்துயர்
உயிர்ப்புடை யாக்கை
வெப்பினாற் புலர்ந்து ஒருநிலை
உறாத மென்றுகிலாள்.

(காட்சிப்படலம் 2)

துப்பு-பவளம், மஞ்சு-மேகம், அப்பு-கண்ணீர், யாக்கை-உடல் துகில்-ஆடை

என்று இராமனின் திருமேனியழகை உருவெளியில் கண்டு நினைவுகளெல்லாம் அவன் மாயமாய்க் கண்ணீர்வடிக்கும் ஓர் காட்சியைக் கம்பன் சொல்லும்போது அதில் மானசீகமான ஆனால் சோகக் கலப்புடன் கூடிய ஒருவகைக் கவின் இருக்கத்தான் வேண்டுமென இருக்கிறது.

கருதி நாயகன் வரும்வரும்
என்பதோர் துணிவால்
கருதி மாதிரம் அனைத்தையும்
அளக்கின்ற கண்ணாள்

(9)

என்று அடுத்த பாட்டில் கூறும்போது அந்தக் கவிதைக் கவின் பன்மடங்கு உயர்வதோடு அல்லாமல் தனிக் காம்பீரியமும் பெற்று

விடுகிறது. உண்ணுதற்கு யார் அடகிடுவாரோ? விருந்தினர் வந்தால் என்நாயகன் யான் இன்றி அவரை எவ்வாறு பேணுவானோ?" என்று பிராட்டி நினைப்பதாக வரும் பாடல் கருத்து நுணுக்கம் பொதிந்து தோன்றக் காண்கிறோம். இராமன், 'மெய்த்திருப்பதம் மேவுக', என்ற போதும், காடு செல்க, என்ற போதும் சித்திரத்தின் மலர்ந்த செந்தாமரை போல் இருந்த நிலையைச் சீதை நினைப்பதாகக் கம்பர் கூறும் பாடலில் மனோபாவ உண்மையைத் தேடினால் காவிய இரசிகன் அழுது விடுவான். அத்தனை சோகானுபவம் பாடலில் இழைந்துள்ளது. திரிசடையும் பிற அரக்கியரும் சூழ நடுவே தேவி வீற்றிருந்த நிலையை அனுமன் காண்கின்றான். இதற்குமுன் திரிசடை நன்னிமித்தம் அறிந்துரைத்தாலும் கனவு கூறுதலும் ஆகிய நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. பின்னர்த் துயின்று கொண்டிருந்த அரக்கியர் எழுந்து படைகளுடன் திரளுதலும் அவர்களுக்கு நடுவே அனுமன் சீதாதேவியை ஐயமற உற்றுநோக்கி மீண்டும் தெளிதலும் கூறப்படுகின்றன. "அறன் இன்னும் அழியவில்லை" என்று கம்பன் அனுமனை எண்ணச் செய்கிறான். பிராட்டியைக்கண்டு அவன்தன் மனத்துள் எண்ணுவதாக வரும் பாடல்களையும் கவிக்கூற்றாக வரும் பாடல்களையும் ஒரு சேர நோக்கினால் துன்பத்தின் தெய்வீக வனப்பால் இக்காட்சிப்படலமும் காண்டப்பெயருக்கு ஏற்றதாகிறது.

## கொடுமைக்கு முன்னால்?

அனுமன் அசோகவனத்தில், நிகழ்வனவற்றையும் அரக்கியர் சூழலில் சீதை வெம்புலிக் குழாத்தின் நடுவே மான்போலத் தோற்றுவதையும் மறைவாக இருந்து கண்டுகொண்டிருந்த போது ஆரவாரத்துடன் அங்கே தோன்றினான் இராவணன். "பன்மணிமகுடம் இளவெயிலெறிப்பக் கங்குலும் பகல்பட வந்தான்," என்று அவன் வரவைக் கவிதையுரிமையோடு

சிறப்பிக்கிறான் கம்பன். எண்பதிற்கு மேற்பட்ட பாடல்களையுடைய இப்படலத்தில் நிந்தனைப்படலம், இராவணன் பிராட்டியை நோக்கி இழிந்த மொழிகளைக் கூறியிரப்பதும், அவற்றைச் செவியுற்ற பிராட்டி அவனை நிந்தித்து மொழிவதும் ஆகிய செய்திகள் கூறப்படுகின்றன. சிலபிரதிகளில் இந்த நிந்தனைப் படலமே இல்லை. முன்பாதி காட்சிப் படலத்திலும், பின்பாதி உருக்காட்டு படலத்திலுமாக அப்பிரதிகளில் இப்படலச் செய்யுட்கள் சேர்க்கப் பட்டிருக்கின்றன. இராவணன் வரவுகண்ட அனுமன் நன்றாக மறைந்து கொள்கிறான். சீதையின் முகத்தில் அச்சக்களை படர்கிறது. தான் கைகூப்பி வணங்கும் ஈசனிடம் கூட இராவணன் அவ்வளவு இரந்து பணிந்து வழிபடு மொழிகள் கூறி அறியான். சீதாதேவியிடம் அதைக்காட்டிலும் பணிவும் குழைவும் தோன்றக் கூறி இரக்கிறான், என்று அந்தக் காட்சியைக் கம்பன் கவிக் கூற்றாகச் சொல்லுகிறான்.

ஈசற்கு ஆயினும்
 ஈடு அழிவற்று இறை
வாசிப்பாடு அழி
 யாத மனத்தினான்
ஆசைப் பாடும்
 அந்நாணும் அடர்த்திடக்
கூசிக் கூசி
 இனையன கூறினான்

(நித்தனைப் படலம்-25)

ஈடு-பராக்கிரமம், இறை-கொஞ்சமும், வாசிப்பாடு-பெருமிதம், கூசி-கூச்சப்பட்டு

இராவணனுடைய அசாத்தியமான இந்தப் பணிவிலும் தேவி இதைக் கேட்டுத் துரும்பெனக் கனன்று கூறும் சீற்றவுரையிலும் மனோபாவ அழகு செறிந்திருக்கின்றது. காவியம் என்று

வரும்போது அது பிரத்தியட்ச வாழ்க்கையினும் உன்னதமானதாகத் தானே இருக்க வேண்டும். எனவே காவியத்தின் ஒவ்வோரணுவிலும் குணச்சித்தரிப்பில் அந்த அழகைச் செறிய வைத்திருப்பான் கவிஞன். அது அவன் கடமையும் கூட.

"வஞ்சனை நீசெய
வள்ளல் சீற்றத்தால்
எஞ்சலில் உலகெலாம்
எஞ்சும் எஞ்சும் என்று
அஞ்சுகின்றேன் இதற்கு
அறனும் சான்றரோ!"

(48)

*சீற்றம்-வெகுளி, எஞ்சல்இல்-மிகுதலில்லாத, சான்று-சாட்சி*

என்று சீதை அறத்தைச் சான்றாக அழைத்து இராணவனை நிந்திக்கும்போது தர்மத்தின் பூரண செளந்தரியம் அதில் விளங்கக் காண்கிறோம். இதுகேட்டு இராவணன் அளப்பரிய சினங் கொள்கிறான். அச்சினங்கண்டு அனுமன் கூடச் செயல்மீறி இராவணன் ஏதாவது செய்து விடுவானோ என்றஞ்சினான். பின் மீண்டும் குழைவு தோன்றப் பேசுகிறான் இலங்கையர் கோன். நயமும் பயமும் காட்டிக் குழந்தையிடம் ஏமாற்ற முயல்வது போலிருந்தது அவன் முயற்சி. இறுதியில் திரும்பிச் சென்றுவிடுகிறான் இராவணன். சீதையின் மனங்குலையாத திண்மையையும் நிந்தனைமொழிகளையும் இராவணன் குழைவும் அச்சுறுத்தலும் இக்காண்டப்பெயருக்கு ஏற்ப இப்படலமும் ஒருவகையான தர்ம செளந்தரியத்துடனேயே அமைந்துள்ளது.

## உயிரளித்த திருஉருவம்

இராவணன் திரும்பிச் சென்றபின், மறைந்திருந்த அனுமன் தேவிக்குமுன் பிரவேசிக்கக் கருதினான். காவலாகச்

சூழ்ந்திருக்கும் அரக்கியர் துயில் வயப்பட்டு மயங்கிய பின்னர்தான் வெளிப்படலாம் என்று அவன் காத்திருந்தான். அதற்குள் பிராட்டி இராவணன் கொடுமை பொறுக்க முடியாமல் பலவகையாகக் கலங்கித் தற்கொலை செய்துகொள்ள முடிவு செய்துவிடுகிறாள். இதற்குள் சூழ இருந்த காவலரக்கியர் துயிலுற்று மயங்கினர். தான் செய்த முடிவுடன் தேவி ஒரு மாதவிப்புதரை அடையக் கண்ட அனுமன் இனியுங் காலந்தாழ்த்தினால் காரியம் கெட்டுவிடும் என்றெண்ணி அவள் முன் உயிரளிக்கத் தோன்றுவான் போலத் தோன்றினான்.

"அண்டர் நாயகன் அருள்தூதன்
யான் எனாத்
தொண்டைவாய் மயிலினைத்
தொழுது தோன்றினான்"

(உருக்காட்டுபடலம்)

தொண்டை - கொல்வைக்கனி, மயில் - சீதை

இராமபிரானுடைய தூதனே தான் என்றும் தேவியிருக்கும் இடம் அறியாமையினாலேயே அவர் நேரில் வரமுடியவில்லை என்றும் தன்னைப்பற்றி மனத்திற் சங்கை யுறலாகாது என்றும் அனுமன் தேவியிடம் வேண்டி வணங்கிக் கூறினான். நூற்றுப் பதினைந்திற்கு மிகுதியான பாடல்களைக் கொண்ட இந்த உருக்காட்டுபடலம் மேலும் இராமனுடைய அழகை அனுமன் வாயிலாகத் தேவி கேட்டறிதலும் கணையாழி பெறலும் அனுமனைப் பாராட்டலும்ஆகியவற்றைத் தன்னகத்தே கொண்டிருக்கின்றது. திருவடியிலிருந்து முடிவரை எம்பெருமானுடைய அழகை அனுமன் பிராட்டிக்குக் கூறுவது ஒன்றே இப்படலமும் சுந்தரகாண்டப் பெயர்ப் பொருள் விளக்கத்திற்குத் தூண்போல அமைகின்ற சான்றுதர ஏற்றதாகிறது."படிஎடுத்து உரைத்துக் காட்டும் படித்தன்று

படிவம்" என்று அனுமனை முதலில் மலைக்கச் செய்த கம்பன் இறுதியில் தன்கவிதைத் துணையைக் கொடுத்து, "அடி முதல் முடியின் காறும் பிராட்டி அறிவுறச் சொல்லுமாறு செய்கிறான். பின் இராமபிரான் கூறிய அடையாள மொழிகளைச் சொல்லிக் கணையாழியையும் எடுத்துச் காட்டுகிறான். இதனாலும் தான் தோன்றியதனாலும் தன் பேருவகையை காட்டித் திறமையை விளக்குவதாலும் அனுமன் தேவிக்கு உயிரளித்த நற்பேற்றை பெற்று விடுகின்றான்.

**"முத்தநகையாள் விழியின்**
**ஆவி..........**
**தத்தியுக மென்குதலை**
**தன்ளவுயிர் தந்தாய்**
**உத்தம என இனைய**
**வாசகம் உரைத்தாள்**

ஆவி-கண்ணீர்த்துளி, எனா - என்று

என்று அவன்தன் உயிரளித்தவன் என்பதைச் சீதாபிராட்டியே கூறும்படியாகச் செய்திருக்கும் கம்பன் செய்யுளால் இவ்வுண்மை புலனாகும். இப்படலத்திற்கான பெயர் இரண்டோர் பிரதிகளில் திருவாழி காட்டுபடலம் என்றிருந்தாலும் உருக்காட்டுபடலம் என்ற பெயரே பொருத்தமும் சிறப்பும் உடையதாம். சுந்தர காண்டமென்றும் சௌந்தரியச் சேர்க்கையில் நடுஇடம் பெற்று நல்லழகு கொடுக்கும் முக்கியப் பகுதியாக அமையும் தகுதி இந்த உருக்காட்டு படலத்திற்குத்தான். ஆகையால் இப்படலம் இக்காண்டத்தின் சுந்தரமென்ற அடைமொழிப்பொருளை மிக உயர்ந்த முறையில் உரிமையாகப் பெற்றுவிடுகிறது.

**''சூளாமணி''** சீதை அனுமனிடம் தன் அடையாளப் பொருளாகச் சூளாமணி கொடுத்து அனுப்பும் செய்தி இச்சூளாமணிப் படலத்திற் கூறப்படுகிறது. இந்நிகழ்ச்சிக்கு

முன்பாக அனுமன் பிராட்டியை நோக்கித் தான் அவளை தன் புயங்களிலே தூக்கிச் சென்று இராமபிரானிடம் சேர்த்து விடுவதாக ஆவேசத்தோடு கூறுவதும் அது எம்பெருமான் ஆண்மைக்கு இழுக்காகும் என்று பிராட்டி மறுத்துரைத்தலும் வருகின்றன. சீதைநாயகனுக்குச்செய்திகூறும் போது அவள் கூற்றாக.

"வந்து எனைக் கரம்பற்றிய
வைகல் வாய்
இந்த இப்பிறவிக்
கிருமாதரைச்
சிந்தையாலும் தொடேனென்ற
செவ்வரந் தந்த வார்த்தை
திருச் செவிசாற்றுவாய்"

(சூளாமணி -34)

வைகல்வாய் - நாளில், இருமாதரை-இரண்டாவதாக, வேறோர் பெண்ணை, சாற்றுவாய்- கூறுவாய்

என்று மிக நளினமாகக் கூறிவிடுவது பொருள் நுணுக்கம் பொதிந்தது. அனுமன் பிராட்டியாருக்குச் சில தேறுதல் மொழிகள் கூறகிறான். இறுதியாக அவள் கூறிய அடையாள மொழிகளையும் கொடுத்த சூளாமணியையும் பெற்று மீள்கிறான். இவ்வளவும் கொண்ட இப்படலம் எண்பத்தொன்பது செய்யுட்களால் நிறைந்திருக்கின்றது.

"சூடையின்மணி கண்மணி
ஒப்பது தொல்நாள்
ஆடையின்கண் இருந்தது
பேரடையாளம்
நாடிவந்தெனது இன்னுயிர்
நல்கிய நம்பி!

கோடி என்று கொடுத்தனள்
மெய்ப்புகழ் கொண்டாள்"

*கண்மணி - கண்ணிற்பாவை (88). நம்பன் - அனுமன், கோடி கொள்வாயாக*

*என்று கம்பன், அனுமன் பிராட்டியிடமிருந்து சூளாமணி பெற்ற நிகழ்ச்சியைப் பாடியிருக்கிறான். இராவணனால் இலங்கை கொண்டுவரப் பெற்ற நாளிலிருந்து ஆடையில் முடிந்து வைத்திருந்த அம்மணியை மிகப்பெரிய நம்பிக்கையுடன் எம்பெருமானுக்கு அனுமன் மூலமாக அனுப்புகிறாள். அனுமன் சீதையிடம் விடைபெறும் போது பெற்றதாயைப் பிரிந்து வெகுதொலைவு செல்ல இருக்கும் மகன் போன்ற பாசஉணர்வை அடைகின்றான்.*

"..............வந்தித்து
அழுது மும்மை வலங்கொடு
இறைஞ்சினன் அன்போடு
எழுது பாவையும் ஏத்தினள்
ஏகினன் இப்பால்" (89)

*என்று அந்த அற்புதமான பாசஉணர்வு சுவை பிறழாமல் கூறப்படுகின்றது. முதலில் அனுமனைப் பற்றியே ஐயுற்ற சீதை அவனையே நம்பி இராமனுக்கு மணிகொடுத்தனுப்பும் அளவுக்கு அவன் சத்தியம் அவளுக்குத் தோற்றத்திலேயே புலப்பட்டது போலும்.........? ஒரு சிறிய அழகிய படலமாகிய இதில் அனுமனின் பக்தியும், பிராட்டியின் நம்பிக்கையும் இரச சௌந்தரியத்தோடு கூறப்படுதலால் இதுவும் காண்டப் பெயருக்கு ஏற்பவே அமைகிறது.*

## அழிந்தது பூம்பொழில்

*"சூளாமணியைப் பெற்று மீண்ட அனுமன் தான் வந்திருப்பதை இராவணனுக்கு எவ்வகையிலேனும் அறிவிக்கக் கருதினான்.*

ஒளிந்துவந்து மறைந்துமீள்வது ஆண்மைக்கு அழகன்றென்று கருதிய அவன் இவ்வாறு எண்ணியதில் வியப்பில்லையல்லவா......? பிராட்டியைச்சிறைசெய்து வைத்திருந்த அசோகவனத்தின் ஒரு பகுதியைச் சூறையாட அனுமனைத் தூண்டியது இச்செயல் ஆவேசத்தோடு நினைவைச் செயலாக்கத் தலைப்பட்டான். அசோகப் பூம்பொழில் அழியத்தொடங்கியது.

"இப்பொழி விளக்கடிது
இறுக்குவென் இறுத்தால்
அப்பெரிய பூசல்செவி
சார்தலும் அரக்கர்
வெப்புறு சினத்தர் எதிர்
மேல் வருவர் வந்தால்
துப்புற முருக்கி
உயிருண்பல் இதுசூதால்
(பொழிவிறுத்தபடலம்-6)

இறுக்குவென் - அழிப்பேன், பூசல்-ஆரவாரம், முருக்கி - கொன்று, சூது - உபாயம்

பேருருவங் கொண்டு அவன் இந்த அழிவு வேலையைச் செய்தான். வனப்புமிக்க மரங்கள் பல வேரோடு வீழ்த்தப்பெற்றன. வானை அளாவி நின்ற பெரிய மரங்களுங்கூட இருந்த இடம் தெரியாமல் முறிந்தும் நெரிந்தும் தகர்ந்தன. சந்திரன் மறையவேண்டிய அளவு இரவுப்போது வளர்ந்திருந்தது. பொழுது விடிய இன்னும்சில நாழிகைகளே இருந்தன. பூம்பொழில் முழுவதையும் அழித்தபின் நிற்கும் பரம்பொருளைப்போலவும், பதினான்கு உலகையும் அளந்தும் எஞ்சிய திருமாலின் திரிவிக்கிரமாவதாரத் தோற்றம் போலவும், நின்றான் அனுமன். செய்தி போது விடிந்ததும் அறிய நேர்ந்த பருவத் தேவர்களாலும் பிறராலும்

இராவணனுக்குக் கூறப்படுகிறது. ஒரு குரங்கு இவ்வளவு செயலையும் செய்தது, என்பதைக் கேட்டஅவனுக்குப் பரிகாசச் சிரிப்புத்தான் வந்தது.

"ஆடகத் தருவின் சோலை
பொடிபடுத் தரக்கர் கரக்கும்
தேடரும் வேரம் வாங்கி
இலங்கையும் சிதைத்த தம்மா
கோடரம் ஒன்றே நன்றுஇது
இராக்கதர் கொற்றம் சொற்றல்
மூடரும் மொழியார் என்ன
மன்னனும் முறுவல் செய்தான்

இவ்வாறு கூறி அவன் எள்ளி நகையாடிக் கொண்டிருக்கும் போதே அசோகவனத்தை அழித்துவிட்டு அனுமன் செய்யும் பயங்கர ஆரவாரம் அரண்மனையே கிடுகிடுக்கும்படி அவன் காதிலும் கேட்டது. செவிகள் குலுங்க அவன்அந்த ஓசையைக் கேட்டான். அனுமனின் வீரசௌந்தரியம் காண்டப் பெயருக்கேற்ப இப்படலத்தில் அமைந்துள்ளது.

## கிங்கரர் வதை

அசோகவனத்தை அழித்துவிட்டு அனுமன் செய்யும் ஆரவாரத்தைக் கேட்ட இராவணன் புன்னகை முகத்தில் தோன்ற உள்ளே சற்றுப் பொறாமையும் கொண்டான். "கிங்கரர்" என்ற பயங்கரமான அரக்கர்களை அழைத்து "விரைவில் அந்தக் குரங்கைப்பற்றிக் கொண்டு வாருங்கள்" என்று ஆணையிட்டான்.

"புல்லியமுறுவல் தோன்றப்
பொறாமையும் சிறிதுபொங்க
எல்லையிலரக் கர்தம்மில்
இசைந்த கிங்கரரை யேவி

வல்லையின் அகலாவண்ணம்
வானையும் வழியையமாற்றிக்
கொல்லலீர் குரங்கை நெய்திற்
பற்றுதிர் கொணர்திர் என்றான்.
(கிங்கரர் வதைப்படலம்)

வல்லை - விரைவு, நொய்தின் - சீக்கிரமாக, பற்றுதிர் - பற்றுவீர்களாக

கிங்கரைப் பின்பற்றி வேறு பல வலிமையிற் சிறந்த அரக்கர்களும் சென்றனர். மலைகள் உருண்டு வருவனபோல அவர்கள் அனுமனை நோக்கி வந்தார்கள். அவர்கள் வருவதை அனுமனும் பார்த்தான். வானத்தை அணுகும் அளவு உயர்ந்து கைலாய மலையைப்போல நின்று கொண்டிருந்தான் ஒப்பற்ற தனி வீரனாகிய அவன். "யாருக்குத் தன்னுடைய வரவு தெரிய வேண்டுமென்று எண்ணினானோ அவனுக்கு அது தெரிந்து கிங்கரர்களைத் தன்னைப் பற்றி வருமாறு அனுப்பியும் இருக்கிறான்" என்று அறிந்தபோது அனுமனுக்கு மகிழ்ச்சியே உண்டாயிற்று. அரக்கர் நெருங்கினர். அனுமனும் எதிர்த்தான். போர் ஆரம்பமாயிற்று. எதிரே நின்று போரிடுபவர்களோ மலைமலையாக நிற்கும் அரக்கர்கள். அனுமனோ தனியன். இருப்பினும் மரங்களை வேருடன் பறித்து அதுகொண்டு எதிரிகளைச் சிதறஅடித்தான் அனுமன்.

"படையிடை யொடிய
நெடுந்தோள்
பறிதாவயிறு திறந்தார்
இடையிடை மலையில் விழுந்தார்
இகல் பொர முடுகி எழுந்தார்" (29)

இகல்-போர், பொர-போர்செய்ய, முடுகி-விரைந்து

என்று அந்த நிகழ்ச்சியைப் போரின் ஆரவார வேகத்திற்கு ஏற்ற சந்தத்தோடு வர்ணிக்கிறான் கம்பன். இறுதியில் போருக்கு வந்தோரில் பலர் மடிந்தது போலவே கிங்கரர்களும் மடிந்தனர். அசோகவனத்தைக் காக்கும் காவல்வீரர் செய்தியைக் கூறுவதற்காக இராவணன் பாற் சென்றனர். அதைக் கேட்ட

இராவணன் என்றும் காண முடியாதது கண்டான். கேட்க முடியாதது கேட்டான்.

"வீட்டியது அரக்கரை
என்னும் வெவ்வுரை
கேட்டதோ, கண்டதோ
கிளத்துவீர் என்றான்! (60)

கிளத்துவீர்-சொல்லுவீர்

என்று கூறவந்தவர்களை நெருப்பால் எரிப்பதுபோலக் கேட்டான். இந்தப்படலம் வெறும் போர் நிகழ்ச்சியை மட்டுமே கூறினாலும் சுந்தரகாண்டமென்னும் பெயருக்கேற்ப மேற்படலத்தைப்போல அனுமனின் வீர சௌந்தரியத்தையே விவரிக்கின்றது.

## சம்புமாலி வதை!

வியப்பும், ஆத்திரமும், ஒருங்கே தூண்ட இராவணன் "சம்புமாலி" என்னும் வல்லமையிற் சிறந்த வீரனை அழைத்து அனுமனைக் கயிறுகளால் பிணித்துக் கொண்டுவருமாறு கட்டளையிட்டு அனுப்புகிறான். படைகளின் பலவகைகளும் பின்தொடரச் சம்புமாலி அசோகவனத்தை நோக்கிப் புறப்பட்டான். அனுமன் அசோகவனத்தின் வாயிலில் இதை எதிர்பார்த்து நிற்பவன் போல நின்றான். கடலில் நடுவிலே கதிர்கள் விளிம்பிலிருந்து விரியத் தோன்றும் உதய சூரியனைப் போல இருந்தது அந்தத் தோற்றம். சம்புமாலி படைகளுடன் வருவது கண்டு தோள்கொட்டி ஆரவாரம் செய்தான் இராமதூதன். அண்டங்கள் எல்லாம் அதிர்ந்தன.........!

"நின்றன திசைக்கண் வேழம்
நெடுங்களிச் செருக்கு நீங்கத்
தென்றிசை நமனும் உள்ளம்
துணுக்கெனச் சிந்திவானிற்
பொன்றலின் மீன்க ளெல்லாம்
பூவென உதிரப் பூவும்
குன்றமும் பிளக்க வேலை
துளக்குறக் கொட்டினான் தோள்"

(சம்புமாலிவதைப் படலம் - 18)

பொன்றலின்-அழிவதால், மீன்கள்-நட்சத்திரங்கள். வேலை-கடல். பூ-உலகம்.

சம்புமாலியும் உடன் வந்த படைகளும் தயங்கி ஒரு கணம் அப்படியே நின்றுவிட்டனர். இராவணனின் கடுமையான கட்டளையை எண்ணிச் சம்புமாலி தன்னுடைய படைகளைப் போருக்கு ஏற்ப அணி, அணியாக வகுத்து நிறுத்தினான் அந்தப் படைவகுப்புக்கு ஏற்றாற் போல் அனுமனும் போருக்கு ஆயத்தமாகி நின்று கொண்டான். வில்லும், வேலும், வாளும் ஆகிய பற்பல ஆயுதங்கள் பல்வேறு திசைகளிலிருந்து அவன் உடலைக் குறிவைத்து ஏககாலத்தில் பாய்ந்து வந்தன. அனுமன் சினக்கொதிப்பு அடைந்தான். சினம் அவனுடைய செயலில் வெளியாயிற்று. அரக்க படைகள் சின்னாபின்னமாயின. கண்கள் தேனின் நிறம் போலச் சிவக்கும்படியாக எதிரில் வந்து நின்றான் சம்புமாலி. அப்போது அவனுடைய உருவம் கூற்றுவனுடைய உருவத்தை நினைவுபடுத்துவது போலக் கொடுமையாக விளங்கிற்று!

"தேனே புரைகண்களலே
சொரியச் சீற்றம் செருக்கினான்
தானே ஆனான் சம்புமாலி
காலன் தன்மையான்". (41)

சம்புமாலியின் வளைந்த வில் இராமதூதனின் மேல் அம்பு மழை பொழிந்தது. அடுத்தடுத்து வந்த அம்புகளின் தாக்குதலை "எழு" என்னும் தன் ஆயுதத்தால் தடுத்துக் கொண்டான் அனுமன். அந்த எழுவையும் கீழே விழச்செய்து விட்டான் சம்புமாலி. இறுதியில் வெகுளியின் உச்சநிலையை அடைந்த அனுமன் சம்புமாலியின் உயிரை நமனுலகு சேர்த்தான்.

## ஐவரை வென்ற ஆற்றல்

சம்புமாலி கொல்லப்பட்டான் என்ற செய்தி கேட்டு இராவணன் வாளை உருவிக்கொண்டு தானே அரியணையிலிருந்து எழுந்துவிட்டான். அப்போது பக்கத்திலிருந்த சேனாதிபதியார் ஐவரும், "நாங்கள் சென்று அந்தக்குரங்கைப் பிடித்து வருகிறோம்" சிலந்தி தின்னும் சிறுவிலங்காகிய ஒரு குரங்கின் பொருட்டுத்தாங்கள் செல்வது தங்கள் பெருமைக்கும்

பேராற்றலுக்கும் இழுக்கு" என்றனர். இராவணன் முதலில் அதற்குச் சம்மதிக்க மறுப்பது போல ஆத்திரமாக இருந்துபின் அவ்வாறே செய்யுமாறு பஞ்ச சேனாதிபதிகளுக்கு ஆக்ஞை யிடுகிறான். சேனாதிபதியர் ஆணையால் அங்கங்கேயிருந்த நால்வகைப் படைகளும் ஒன்று கூடின. ஐந்து பெருவீரரும் தலைமை ஏற்று நடத்த அப்பெரும் படைக்கடல் அனுமனை அடைந்தது. அனுமன் அலட்சியமாகத் தலை நிமிர்ந்து பார்த்தான்.

**இவ்வகை ஐவரும்**
**எழுந்த தானையர்**
**மொய் கிளர்தோரணம்**
**அதனை முற்றினார்**
**கையொடு கையுற**
**அணியுங் கட்டினார்**
**ஐயனும் அவர்நிலை**
**அமையநோக்கினான்.**

**(பஞ்சசேனாபதிகள்வதை–25)**

தானை-படைகள், அணிகட்டுதல்-படைகளை அணிவகுத்தல் ஐயன்-அனுமன், அமைய-பொருந்த

'அமைய' என்ற சொல் அனுமனின் நுணுக்கமான திறமைக்குக் கொடுக்கப்படுகிற கம்பனின் பாராட்டு முத்திரை. நீண்டநேரம் இருதரப்பாரும் காண அஞ்சத்தக்க போரைச் செய்தனர். ஒவ்வொருவராக ஐந்து சேனாதிபதிகளும் தோற்று உயிர்விடுகின்றனர். அனுமனின் ஆற்றல் ஐந்து பெரும் படைத்தலைவர்களை வென்று உயிர்பறிக்கும் அளவிற்குச் சிறந்தது, என்பது இங்கே அறியத்தக்கது. "சௌந்தரியம்" சிருங்காரரசத்திற்கு மட்டும் உரியது என்று எண்ணுகின்றவர்கள் அதன் எல்லையைக் குறுக்கி விடுகிறார்கள். சௌந்தரியம் வீரரசத்தில் பூரணமாக வேண்டியே இருக்கிறது. "சுந்தரகாண்டம், என்ற பெயருக்கு ஏற்ப இரண்டு வகையிலும் சௌந்தரியத்தை ரசங்களோடு பொருத்தியிருக்கிறான் கம்பன். "கிங்கரர் வதைப்படலம்" முதல் அக்ககுமரன் வதைப்படலம் இறுதியாகவுள்ள நான்கு படலங்களிலும் "வீரரசத்தின் அழகு விளங்க அமைத்துள்ள கம்பனின் சாதுரியத்தைக் காண்கிறோ'

சிருங்காரத்தில் மென்மையோடும் வீரத்தில் வன்மை அற்புதம் இவைகளோடும் கலந்து அழகு தோன்றுகிறது.

## தளை அவிழ்ந்தது

போரில் தனக்குத் தோல்வியடைந்து அனுமன் பிரம்மாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டு விட்டதாக எண்ணிக் கொண்டான் இந்திரஜித்து. அரக்கர் கூட்டம் அனுமனைச் சுற்றி வட்டமிட்டுச் சூழ்ந்து இகழத்தொடங்கியது. "அனுமன் இலங்கை வீதிவழியாக இராவணன் மாளிகைக்குக் கொண்டு போகப்படுதல் வேண்டும்" என்று கட்டளை இட்டான் இராவண குமரன். பலஅரக்கர்கள் அவன் உடலைப் பற்றியிருந்த நாகபாசத்தைப் பிடித்து இழுத்துக் கொண்டு சென்றனர். வீதிதோறும் ஆடவர் பெண்டிர் அனைவரும் கூடிக்கூடி இந்தக் காட்சியைக் கண்டனர். இராமதூதன் பலவாறு சிந்தித்துக் கொண்டே சென்றான். முன்சென்றவர் அனுமன் சிறைப்பட்ட செய்தியை இராவணனுக்குக் கூறி அவனளித்த பரிசில்களைப் பெற்றனர். இதற்குள் அனுமன் நாகபாசத்தினால் சிறைப்பட்ட செய்தி சீதாதேவிக்குத் திரிசடை மூலமாகத் தெரிந்தது. தனக்காக வந்ததனி வீரனுக்கு நேர்ந்த துயரை நினைந்து பிராட்டி வருந்தினாள். இந்திரஜித்து அனுமனை இராவணனுடைய பேரவையிற் கொண்டு போய் நிறுத்துகிறான். பிரம்மாண்டமான தோற்றத்துடன் விளங்கிய அவைக்குள்ளே வந்து நின்ற அனுமனைச் சீற்றம் பொங்க நோக்கினான் தென்னிலங்கை மன்னன்.

அப்படியே இராவணனைக் கழுத்தை நெரித்துக் கொன்று விடலாம் போலிருந்தது அனுமனுக்கு. பின் இடமும் காரியமும் கருதி அடக்கமுற்றான். அதன்பிறகு இராவணனுக்கும் அனுமனுக்கும் ஒரு நீண்ட காரசாரமான சம்வாதம் நிகழ்கிறது. விவாதத்தின் இடையே அளவுமீறிய ஆவேசத்தினால் அனுமனைக் கொலை செய்யுமாறு கூறிய இராவணனை விபீஷணன் சாந்தப்படுத்தித் தடுத்தான். இறுதியில் அனுமனின் வாலைத்தீயிட்டுக் கொளுத்தச் சொல்கிறான் இலங்கையர் வேந்தன். நாக பாசத்துடன் நெருப்பிடக் கூடாதென்று பாசத்தளையை எடுத்துக் கொள்கிறான் இந்திரசித்து.

அரக்கர்களின் வலிய கயிறுகள் அனுமனைப் பிணித்தன. கயிறு கட்டி அவனை வீதிதோறும் இழுத்துச் சென்று நெருப்பிடக்கருதியபோது அனுமன் அதை மீற முடிந்தவனாயிருந்தும் அடங்கிச் செல்லுகின்றான்.

"நொய்யபாசம் புரம்பிணிப்ப
நோன்மை இலன்போல்
உடல் நுணங்கி
வெய்ய அரக்கர் புறத்தலைப்ப
வீடும் உணர்ந்தே விரைவு
இல்லா
ஐயன் விஞ்சை தனையறிந்தும்
அறியாதான் போல் அவிஞ்சை
யெனும்
பொய்யை மெய்போல்
நடிக்கின்ற யோகிபோன்றான்
போகின்றான்"

(பிணிவிட்டுபடலம்-122)

புரம்-உடல், நோன்மை-வலி, வீடு-விடுதலை, நுணங்கி-கட்டுண்டு, விஞ்சை-ஞானம்

என்று மற்றுமுணர்ந்த ஞானி முழுமூடனைனைப் போலடிப்பதென அனுமன் ஆற்றலையெல்லாம் அடக்கிக் கொண்டு செல்வதாகக் கம்பன் பேசுகிறான். வாலில் தீயிட்டனர். தீக்கொழுந்துகள் எழுந்தன. அடங்கிக்கிடந்த சொரூபத்தை ஆதாரத்தோடு வெளிக்காட்டி வானமுகட்டில் தாவி எழுந்தான் அனுமன். பிணித்திருந்த தளைகள் அவிழ்ந்து தரையில் சிதறி விழுந்தன.

## எரிந்தது இலங்கை.

வாலில் தீயோடு தளைகளை அவிழ்த்துச் சிதறியவாறே மேலெழுந்த அனுமன் இலங்கை நகரை அங்கியங்கடவுளுக்கு இரையாக்கக் கருதினான்.

தொல்லை வாலை மூலமறச்
சுட்டு நகரைச்

சூழ்போக்கி எல்லைகடக்க
விடுமீன்கள்

(பிணிவிடு பாடல்)

என்னும் இராவணனுக்கு அனுமன் "சுட்டு நகரைச் சூழ்போக்கிவிடுகிறான்." "குரங்கின் வாலைத் தீயுண்ணச் செய்து நகரைச்சுற்றி அழைத்துச் செல்லுங்கள்" என்றபொருள் படும்படி இராவணன் தமருக்கு இட்டகட்டளையை அனுமன் இவ்வாறு இலங்கைநகரை எரிக்கும் ஆணையாகப் பொருள் கொள்ளவும் இடந்தருகிறது கம்பனின் சாதுரியமான பேச்சு. மேகம் வெம்மை யுற்றுக் கொதிப்படைந்துவிடும் போல அவ்வளவு வெய்யபுகைக்கற்றைகள் தீ நாக்குக்களிலிருந்து மேலெழுந்தன. இராவணன் மாளிகையில் தீப்பற்றும்படி செய்தான் அனுமன். இராவணனுக்குத் தன்னுடைய வீரத்தையே இகழும் படியான மிகுந்த சினம் தோன்றிவிடுகிறது. திசைகள் அதிர்ந்து நடுங்க வெடிச்சிரிப்புச் சிரித்தான்.

"இன்று புன் தொழிற் குரங்குதன்
வலியினால் இலங்கை
நின்றுவெந்துமா நீறு எழு கின்றது
செந்தீத்
தின்று தேக்கிடு கின்றது தேவர்
கள்சிரிப்பார்
நன்றுநன்று போர்வலி என
இராவணன் நக்கான்"

(இலங்கை எரியூட்டுபடலம்-46)

நீறு-சாம்பர், தேக்கிடுதல்-ஏப்பமிடுதல், நக்கான்-கோபச் சிரிப்புச் சிரித்தான்

அந்தச் சிரிப்பின் எதிரொலியாக மீண்டும் அனுமனைப் பிடித்துவருமாறு ஆட்கள் அனுப்பப்பெற்றனர். பிடிக்க வந்த பெரு வீரர்கள் ஒரே ஒரு மரத்தினால் அழித்து முடித்து விட்டான் அனுமன். சீதாபிராட்டி இருந்த அசோகவனம் ஒன்று தவிர மற்றையெல்லாம் அழிந்து தீப்பட்டிருந்தன. இறுதியாகத் தான் இலங்கையிலிருந்து செல்வதற்குள் பிராட்டியைத் தரிசிக்க நினைத்து அவ்வாறே கண்டுவணங்கிய பின்னர் விடைபெற்று மீள்கிறான் இராமதூதன். இலங்கையில்

எரி சற்றே தணிந்தது. "அவிஞ்சையென்னும் பொய்யினை மெய்போல நடித்து"ச் செல்லும் அழகை அனுமனிடம் பார்த்தோம். இலங்கை எரியூட்டுபடலத்தில் ஆணவம் அழியும்போது பாவம் மடியும்போது-தோன்றுசத்தியமயமான நேர்மையின் அழகு பூர்ணமாக இருக்கிறது. சுந்தரகாண்டம் என்னும் பெயர் பொருளை இவ்வகையால் இவைகளும் பிணக்கின்றி விளக்கிக் காட்டுகின்றன. பாசப்படலம் பிரம்மாஸ்திரத்திற்கு மரியாதை கொடுக்கும் அனுமனின் பணிவழமைச் சொல்லும். திருவடி தொழுத படலமோ அழகுக் களஞ்சியமாகும்.

## உலகளந்த திருவடியில் கடல் கடந்த தூதன்

இலங்கையிலிருந்து புறப்பட்ட அனுமன் இடையே மைந்நாக மலையைக் கடந்து கடல் நடுவே கிடக்கத்தாவி மகேந்திரமலைக்கு வந்து சேர்ந்தான். குரங்கினத்தைச் சேர்ந்த வீரர்கள் மகிழ்ச்சியோடு வரவேற்றனர். அங்கதனைப் போன்றவர்களைப் பணிந்து நிகழ்ந்தவற்றைக் கூறினான் அனுமன். பின்னர் கூட்டமாக இராமனுக்கு இந்தநல்ல செய்தியைக் கூறுவதற்காகப் புறப்பட்டனர். அந்தப்பயணத்தின் நடுவே மதுவனத்தில் ஒரு ஆரவாரக் கலவரம் நிகழ்ந்தது. அங்கே இராமனிருக்கும் இடத்திலோ நொடிக்கு நொடி கவலையில் ஆழும் எம்பெருமானாகிய அவனைச் சுக்கிரீவன் தேற்றிக் கொண்டிருந்தான். மதுவனத்தில் கலவரத்திற்கு ஆளாகி உடலிற் காயங்களோடு ததிமுகன் அப்போது வந்து சேர்ந்தான். ததிமுகன் கூறிய விவரங்களிலிருந்து அனுமன் நல்ல செய்தியோடு வந்திருக்கலாம் ஊகம் செய்து கொண்ட சுக்கிரீவன் "இது நன்மைக்கு அடையாள மாகுமென்று" இராமபிரானை நோக்கிச் சொன்னான். சற்று நேரத்தில் அனுமன் அங்கே தோன்றினான். சீதாதேவி இருந்த தென்திசை நோக்கி உச்சிமேல் கூப்பி யகையனாய் வணங்கிப் பின் இராமபிரானுடைய உலகளந்த திருவடிகளில் வீழ்ந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தான் கடல் கடந்த அந்தத் தூதன். அவன் செய்த சங்கேதத்தில் நன்மைகண்டு மகிழ்ந்தான் இராமபிரான்.

"கண்டனன் கற்பினுக்கு
அணியைக் கண்களால்
தெண்டிரை அலைகடல்
இலங்கைத் தென்னகர்
அண்டர் நாயக! இனித்
தவிர்தி ஐயமும்
பண்டுளதுயரும் என்று
அனுமன் பன்னுவான்"

(திருவடிதொழுத படலம்—58)

என்று சொல்லின் செல்வனாகிய அனுமன் ஸ்ரீராமனுடைய மனச்சந்தேகங்களையெல்லாம் மாற்றவல்ல முறையில் தன் பேச்சைக் கூறுவதாகக் கம்பன் பாடியுள்ளான்.

"இற்பிறப்பு என்பது ஒன்றும்
இரும்பொறை என்பது ஒன்றும்
கற்பெனும் பெயரது ஒன்றும்
களிநடம் புரியக்கண்டேன்" (62)

என்று பிராட்டியின் பாதிவிரத்திய தர்மத்தின் திண்மையையும் சௌந்தரியத்தையும் மேலும் பலவாறு கூறிப் பயபக்தியோடு சூளாமணியை எடுத்துக் கொடுக்கிறான் அனுமன். எம்பிரான் மகிழ்ச்சியடைந்து போருக்கு மேலே செய்ய வேண்டிய காரியங்களைத் திட்டமிடுகிறார். உருக்காட்டுபடலத்தில் அனுமன் பிராட்டியிடம் கணையாழியைக் கொடுத்தபோது எந்த ஒரு சௌந்தரியத்தைக் கண்டோமோ அதே சௌந்தரியம் இங்கே திருவடிதொழுத படலத்திலும் இணையற்ற சிறப்புடன் அமைந்திருக்கிறது.

## சுந்தரப் பெயரும் மந்திரக்கவிதையும்

.(இறுவாய்)

ஆகச் சுந்தரகாண்டத்தின் பதினைந்து படலங்களும் இதுவரை மிகச்சுருங்கிய முறையில் விமர்சிக்கப்பட்டன. சுந்தரகாண்டம் என்ற பெயர்ப் பொருளாகிய சௌந்தரிய இயைபு அந்தப் பதினைந்து படலங்களின் அமைப்பிலும் பொருளிலும் சம்பவத்திலும் அமைந்திருக்கக் கண்டோம். இராமாயணத்தின் காவிய குணம் சுந்தரகாண்டத்திலேதான் பொருந்தியிருக்கிற தென்று வெளிப்படையாக அறியலாம்.

"பாவிகமென்பது காப்பியப்
பண்பே" (தண்டியலங்காரம்)
"விளம்பிய காப்பியக் குணங்கள்
பாவிகமே" (மாறனலங்காரம்)

என்று அலங்கார நூல்கள் காவியத்தின் தொகுதியான குணத்தைப் பாவிகம் என்னும் அலங்காரமாகக் கூறுகின்றன. சுந்தரகாண்டத்திற்கு மேலேதான் இராம, இராவணயுத்தம் ஆரம்பமாகிறது. சத்தியத்துக்காகவும், நேர்மைக்காகவும், தர்மத்துக்காகவும் போராடிய போராட்டமே அந்த யுத்தம். யுத்தத்திற்கு முன்பு பிராட்டி இருக்கின்ற இடத்தை இலங்கையிலிருந்து விவரமாக அனுமன் வந்து உரைப்பது முதலிய நிகழ்ச்சிகள் சுந்தரகாண்டத்தைச் சேர்ந்தவை. எந்த சத்தியத்துக்காகவும் நியாயத்துக்காகவும் தர்மத்துக்காகவும் போர்நடக்கப்போகிறதோ அதே சத்திய நியாய தர்மங்களின் பூர்ண சௌந்தரியத்தைச் சுந்தரகாண்டத்தில் வெளியிடை மலைபோல விளக்கமாக்கக் காண்கிறோம். கடல்தாவு படலம் முதல் திருவடிதொழுதபடலம் இறுதியாக உள்ள பதினைந்து படலங்களுங்கூடிய ஆயிரத்து முந்நூற்றுக்கு மேற்பட்ட கவிதைகளை உடைய தொகுதியே கம்பனுடைய சுந்தரப்பொழில் சுந்தரகாண்டத்தில் உள்ள ஒவ்வோர் கவிதையும் மந்திர சக்தி வாய்ந்தது. தெய்வீக அழகும் ஆற்றலும் பொருந்தியது. சுந்தரகாண்டப் பாராயணம் வரப்பிரசாத பலன் தரக்கூடியது.

புண்ணியகாலமாகிய தனுர் மாதத்தில் காலை நற்பொழுதில் எவ்வளவோ மகா சௌந்தரியங்கள் நிறைந்து விளங்கும் இந்த சுந்தர காண்டத்தைப் படித்து மகிழ்வது கல்வியும் செல்வமும் தெய்வீக அருளும் தரவல்லதாகும். கம்பன், வால்மீகி, ஆகிய இரண்டு பெரியமகாகவிகளும் சுந்தரகாண்டம் என்ற இந்தப் பெயரை இதில் வரும் நிகழ்ச்சிகளிலும் கதைப் பகுதியிலும் உள்ளகடவுட்டன்மை பொருந்திய அசாதாரண அழகு கருதியே இட்டிருக்க வேண்டும். இராமாயணம் ஒரு சுந்தரமான காவியமானாலும் அதிலும் சுந்தரம் மிகுந்து விளங்கும் இடம் சுந்தரகாண்டமே என்ற கருத்து இராமாயணத்தைப் பாடிய எல்லாக்

கவிகளுக்கும் இருந்திருக்கிறது. சுந்தரகாண்டத்தின் பெயர்ப் பொருத்தம் இந்த நோக்கத்தோடு பார்க்கும் போது மந்திரசக்தி வாய்ந்த ஒன்றாகத் தோன்றுகிறது. மேலும் இராமாயணக் கதையையே முடித்துக் கொடுக்கின்ற அளவு பெருமை வாய்ந்த ஒரு பாத்திரமாக அனுமன் இக்காண்டத்திலேயே நேயர்களுக்கு அறிமுகம் செய்து வைக்கப்படுகின்றான்.

கடலைக் கடந்து செயலை முடித்துத் திருவடிதொழுது நற்செய்தி தரும் அனுமனின் முழுத்தொடர்பும் கொண்டே இக்காண்டத்தின் நிகழ்ச்சிகள் யாவும் நிகழ்கின்றன. இலங்கை நகரில் அவன் செய்யும் சாமர்த்தியமான போர்களில் எம்பெருமானிடம் அவனுக்கு உள்ள பக்தியின் ஆழம் வெளிப்படுகிறது. அற்புதம், பிரமை, இவைகளோடு கூடிய ஒருவிதமான பேரழகும் அந்தச் செயல்களில் கலந்திருக்கிறது. எனவே பலவகையாலும் புண்ணியமும் புனிதத்துவமும் பேரழகும் நிறைந்த ஒன்றாகும் தகுதி சுந்தரகாண்டத்திற்கே உரியது. சுந்தரகாண்டச் செய்யுட்களில் கம்பனின் அழகு முத்திரை பளிச்சென்று மின்னுகிறது. சொல்வளத்தோடு பொருட்செறிவும் பொருந்தியவையே அவ்வளவு செய்யுட்களும் இராமாயணக் காப்பியத்தைக் கம்பன் தமிழ்ப்படுத்தியதே ஒரு சௌந்தரிய சிருஷ்டி சுந்தரகாண்டத்தின் பெரியவனப்பைக் காணும் போது அது மிகப்பெரிய உண்மையாக உயர்ந்துவிடுகிறது. படித்துப் படித்து வரமடைய வேண்டிய, "நினைத்தது கொடுக்கும் நிகரிலாத சக்தி" சுந்தரகாண்டத்திற்கு உண்டு.

## குழந்தை உள்ளம்

இறைவன் படைத்த தூய்மை மாறாத உள்ளம் குழந்தை உள்ளம் அந்த உள்ளத்திற்கு உவமை தேட வேண்டுமானால் கடவுள் உள்ளந்தான் அதற்கு உவமையாக அமைய முடியும். பொய்யும் களவும் புகுந்து கலக்காத தெளிந்த உள்ளம் அது. நீரின் தண்மையையும், நெருப்பின் வெம்மையையும் அறியாத உள்ளம். அந்த இளைய உள்ளம் கோயிலிற் குடிபுகுத்தி வழிபடுதற்குரிய தெய்வத் தன்மை வாய்ந்தது. இது இன்னது, இதனால் இது நேரும் என்று பகுத்தறியும் ஆற்றல் அதற்கு இல்லையானாலும் படைப்புக் கடவுளின்

சிருஷ்டிமணம்மாறாத தூய்மை அங்கே நின்று நிலவுகிறது. குழந்தையென்னும் நடமாடுங் கடவுளுக்குள்ளே தூயஉள்ளமாகிய சிலை காட்சி கொடுக்கிறது. கழுத்தளவு பொய்மையிலே மூழ்கி விட்ட மனித உலகம் காணத்திறமற்ற ஒளிக்காட்சி குழந்தை உள்ளத்திலிருந்து கிளர்ந்து வீசுகிறது. அச்சத்தின் சாயை சிறிதளவும் அந்த உள்ளத்தில் நுழைவதில்லை. குழந்தையைப் பொருத்தமட்டில் ரப்பர் பாம்பும் உயிருள்ள பாம்பும் ஒன்றுதான். இரண்டிற்கும் அது அஞ்சுவதில்லை. இரண்டுடனும் அது விளையாடுகிறது. தூய்மையுடைய உள்ளம் காண்பதையெல்லாம் தூய்மை மயமாகவே காண்கிறது. உருவத்தால் ஒப்புமைபெற்ற ரப்பர் பாம்பிற்கும், உருவம், செயல், படைப்பு, நச்சுப்பல் முதலிய எல்லாவற்றினாலும் தானேயாகிய பாம்பிற்கும், வேற்றுமை காணமுடியாத நிலையில் விளங்குகிறது அந்தப் பளிங்கு உள்ளம். நெருப்பைத் தொட்டால் அது சுடும், கல்லைக் கடித்தால் அது பல்லை உடைக்கும். இவைகள் ஒன்றுமே அந்த உள்ளம் அறியாது. குழந்தை உள்ளம் வானவெளியில் உலாக் கொள்ளும் திங்களுடன் பேசவிரும்புகிறது. அம்புலி! அம்புலி! என்று தன் மழலைச் சொல்லால் அது திங்களை அழைக்கிறது. அம்புலி தன்னோடு பேசும் என்ற ஆவல் அந்த அழைப்பில் நிறைந்திருக்கிறது. அது பேசாத போது உள்ளம் அடைகின்ற ஏமாற்றம் மிகுதியாகிறது. நாளடைவில் அந்த ஏமாற்றம் ஆராய்ச்சியாக மாறுகிறது.

குழந்தை உள்ளம் முற்றத் தலைப்படுகிறது. "அம்புலி பேசாது" என்ற முடிவு கிடைக்கிறது. உள்ளம் பகுத்தறியும் ஆற்றலைப் பெறுகிறது. கவிஞன் ஒருவன் ஒரு அழகான கவிதையிலே இதை வரைந்து காட்டுகிறான். குழந்தை உள்ளம் பரந்தகடலின் மேல் வெகுண்டு எழுவதையும், அதன் பயனாக அவர்கள் பேசுவதையும் கவி அமைத்துக் காட்டுகிறான். அந்த அமைப்பிலிருந்து குழந்தை உள்ளம் எத்தகையது என்பதை நாம் மறவாத முறையில் அறிந்து கொள்ள முடியும். அதிலுள்ள கவிச் சுவையையும் நுகரமுடியும். ஒரு கவிஞனை வழியிற் சந்தித்த மக்கள் சிலர் "ஐயா, உங்கள் ஊர் எது?" என்று கேட்கின்றனர். இந்தக் கேள்விக்குக் கவிஞன் என்ன பதில்

சொல்லியிருக்க வேண்டும்? .... இதுதான் எனது ஊர் என்று தனது ஊரின் பெயரைக் குறிப்பிட்டுப் பதில் கூறியிருக்க வேண்டும். ஆனால் அந்தக் கவிஞன் "இத்தகைய குழந்தை உள்ளம் படைத்தவர் வாழ்வதால் இன்னநிகழ்ச்சிகள் நிகழுந்தன்மையது எம்மூர்" என்று அந்தக் கவிதையை ஒரு அழகிய காட்சியை ஓவியமாக எழுதிக் காட்டும் போது சுவைமிக்க செய்யுளின் தோற்றத்திற்கு அது ஒரு எடுத்துக் காட்டாக அமைகிறது. ஒருசிறந்த கவியுள்ளம் தனது அகக்கண்முன் ஒருகாட்சியை பழ நினைவுகொண்டு அமைப்பதிலுள்ள நயம் அங்குப் பொலிகிறது. கேள்விக்குக் கவிஞன் பதில் கூறுகிறான்:-

கடல் தனது அலைக்கரங்களால் இசையொலி எழுப்பி விளையாடும் அழகிய கடற்கரை. குழந்தையுள்ளம் படைத்த இளம்மகளிர் கூட்டம் கூட்டமாகக் கடற்கரை மணலிற் சிறுசிறு வீடுகள் கட்டி விளையாடுகின்றனர். அதில் அவர்களுக்கு ஒரு தனி இன்பம். கடற்கரைமணலில் அவர்கள் கை வண்மையாற் கட்டும் சிற்றில்களைக் கண்டு அவர்களுக்கே ஒரு பெருமிதம் பாய்ந்துவரும் ஓசைமிக்க கடல் அலைகளுக்கு மகிழும் குழந்தையுள்ளத்தை வருத்தவேண்டுமென்ற எண்ணமோ என்னவோ? ஆர்கலித்துவந்த பேரலையொன்று அவர்களுடைய மணற்சிறுவீடுகளை மூழ்கஅடித்துச் சென்று விட்டது. இளம் உள்ளத்திற்குத் தனது ஆக்கம் அழிவதைக் கண்டு பொறுக்க முடியவில்லை. கைவருந்தக் கட்டிய வீடு கடலலைக்குப்பலியாவது கண்டு துடித்தது குழந்தையுள்ளம். கடலின் மேற் கோபம் எழுந்தது. "கடலே! கடலே! இரு! இரு! உன்னை என்ன செய்கிறேன் பார்! நீ செய்ததை என் அன்னையிடம் சொல்லிவிடப் போகிறேன். உன்னைச் சும்மா விடப்போவதில்லை! தெரிந்து கொள்'' என்று அந்த இளம்மகளிர் வாய்கள் அலறுகின்றன. அதோடு நிற்கவில்லை அவர்கள் சினம். அன்னையிடம் கடலைச் ''சொல்லிக் கொடுப்''பதற்காக வீட்டிற்கே கிளம்பி விட்டார்கள் அவர்கள். வீட்டை நோக்கி வேகமாக வருகின்றன சின்னஞ்சிறுகால்கள். நினைக்க நினைக்க அவர்களுக்கு இதயம் வெடித்துவிடும் போலிருந்தது.

கடலின் மேல் வந்த சினம் தங்கள் மேலேயே திரும்புகிறது. தங்கள் கழுத்திலிருந்த முத்துமாலையை அறுத்தெறிகிறது அவர்கள் கை. சிதறிவிழுந்த முத்துக்கள் மண்முழுதும் ஒளிவிளக் கேற்றுகின்றன. குழந்தையுள்ளத்தில் எழுகின்ற கோபம் முற்றும் போது அது தன் மேலேயே திரும்புகிறது. அப்போது அது தன்னையே வருந்திக்கொள்கிறது. பாதையெல்லாம் இவர்கள் அறுத்தெரிந்த முத்துக்கள் பரந்து கிடக்கின்றன. பாதை வழியாகப் போவார் வருவோரையெல்லாம் இவைகள் புன்னையரும்புகளோ? அன்றி முத்துக்களோ? என்றும் மயங்கச் செய்கிறது, இவர்கள் செய்த செயல். பாதையிற் போவோர் வருவோர் புத்தி தடுமாறுகிறது. அப்படிப்பட்ட இயற்கைவளம் வாய்ந்த காவிரிப்பூம்பட்டினமே எனது ஊர் என்று கூறிமுடிக்கிறான் கவிஞன்

"முன்னைத்தஞ் சிற்றின்முழங்கு
கடலோதம் மூழ்கிப் போக
அன்னைக் குரைப்பனறிவாய்
கடலேயென் றலறிப் பேருந்
தன்மை மடவார் தளர்ந்து குத்த
வெண்முத்தம் தயங்குகானற்
புன்னையரும் பேய்ப்பப்
போவாரைப்பேதுனுக்கும்
புகாரே எம்மூர்

முதலிரண்டு அடிகளில் குழந்தை உள்ளத்தில் எழுகின்ற சினத்தை அழகான முறையில் ஓசை நயத்தோடு அமைத்துள்ளான் கவிஞன். பிற்காலத்திலே உண்மையிலேயே மனைவிளக்காக இருந்து இல்வாழ்க்கையாகிய வீட்டைக் கட்டப்போகின்ற இளம் பருவத்து மகளிர்க்குத் தாம் கட்டிய மணற்சிறு வீடுகளின் மீது உரிமையுணர்வை இந்தக் கவிதையிற் காணமுடிகிறது.

அன்னையிடம் சொல்லிவிட்டால் கடல் சரியான தண்டனையைப் பெற்றே தீரும் என்ற குழந்தையுள்ளத்தின் நம்பிக்கை பாட்டில் இயைந்து நிற்கிறது. ஏமாற்றத்தின் காரணமாக எழுகின்ற கோபம் என்ன முடிவை அடைகிறது?

என்பதைத் தங்கள் முத்துமாலைகளை அறுத்துச் சிதறுகின்ற செயலிலிருந்து அறிய முடிகிறது. குழந்தை உள்ளம் என்றால் அது ஒரு தூய்மைக்கோயிலேதான் ஆகும். அதன் உணர்ச்சிகளெல்லாம் உண்மைக்கு மாறுபடாதவைகள். அந்த உள்ளம் நம்பிக்கை மிகுந்த உள்ளமாகத் திகழக் காண்கிறோம். தான் நம்புகிற தன் அன்னைக்குக் கடலையும் ஒருகை பார்க்கும் ஆற்றலுண்டு என்று அந்த உள்ளம் எண்ணுகிறது. அதில்தான் எத்துணை ஆழமான மனோபாவம் அமைந்திருக்கிறது.

